

''எதுக்கு உங்க கண்ணைக் கட்டியிருக்கீங்க?''

''ஒண்ணுமில்லே .... எனக்கு ரத்தம்னு அலர்ஜி சார்!''

1



''என் புதுச் சிறுகதை படிச்சியே, அதுக்கு 'சொல்லடி சிவசக்தி'னு பெயர் வைக்கலாம்னு இருக்கேன்... நீ என்ன சொல்றே?''

''சரிதான்! கதைதான் காப்பின்னு தலைப்புமா?''

2

**இந்த ஜோக்குகளின் அடிப்படையில் வாசகர்களுக்கு ஒரு போட்டி: 53ம் பக்கம் பார்க்க.**



3

''அந்த நடிகைக்குக் கொஞ்சம்கூட விவஸ்தையே கிடையாது. டைரக்டர் 'கட்' சொன்ன பிறகும் ஹீரோவுக்கு முத்தம் கொடுத்துக்கிட்டே இருக்கா பாரு!''

''நீங்க ஒண்ணு! அந்த நடிகையின் லிப்ஸ்டிக் உதடு ஹீரோ கன்னத்திலே ஒட்டிக்கிட்டு வரமாட்டேங்குது!''



4

''டாக்டர், காலையிலே பத்து மணியிலேருந்து சாயந்திரம் அஞ்சு மணிவரைக்கும் எனக்கு இதயத்திலே ஒரே படபடப்பு! என்ன செய்யலாம்?''

''உங்க மானேஜர் கிட்டச் சொல்லி, உங்க வீட்டுக்கு எதிரே இருக்கிற லேடி டைப்பிஸ்டை வேறே இடத்துக்கு மாத்தச் சொல்லுங்க, சரியாயிடும்!''

''நம்ம டாக்டர் தான் கட்டிய வீட்டின் வராண்டாவிற்கு 'அவுட் பேஷண்ட் வார்டு,' பூஜை அறைக்கு 'கன்ஸல்டிங் ரூம்', சமையலறைக்கு 'ஆபரேஷன் தியேட்டர்', படுக்கை அறைக்கு 'ஸ்பெஷல் வார்டு', ஸ்டோர் ரூமுக்கு 'டிஸ்பென்ஸரி' என்று பெயர் சூட்டி யிருக்கார்!''

5



# டெபாசிட்தாரர்களுக்கு
# V.I.P. BRIEF CASE
# அன்பளிப்பு

## நம்பிக்கையின் ஒளி விளக்கு 'பாலாஜி'

# 22%

டெபாசிட்தாரர்களுக்கு வழங்கும் கூடுதல் வட்டி



## பாலாஜி மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்

(Hire Purchase Financiers for Motor Vehicles)

கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 22% |

6 மாதங்கள் வரை-**16%**

3 மாதங்கள் வரை-**15%**

உங்கள் டெபாசிட்டுகளை அனுப்பும் முகவரி

## பாலாஜி மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்

(Hire Purchase Financiers for Motor Vehicles)

91. உஸ்மான் ரோடு, (சிவா விஷ்ணு கோயில் அருகில்)
தி. நகர், சென்னை-600 017. போன் : 447186

| | | |
|---|---|---|
| பெங்களூர் | : | 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்) மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003 போன் : 366971 |
| தஞ்சாவூர் | : | எண் : 2 & 3, முதல் மாடி, ஜி.எ. கனால் ரோடு, தஞ்சாவூர், போன் : 1626 |
| திருவண்ணாமலை | : | 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601 போன் : 483 |
| பட்டுக்கோட்டை | : | 9-A, தஞ்சாவூரி தெரு, பட்டுக்கோட்டை, போன் : 453 |

CHARI



**மே**ஜர் சுந்தரராஜனும், கோமல் சுவாமிநாதனும் பெரியகுளம் விக்டோரியா மெமோரியல் போர்டு உயர்நிலைப் பள்ளியில் ஒன்ருகப்படித்தவர்கள். அவர்களைச் சந்திக்கச் செய்தபோது..

மேஜர்: வாங்க கோமல்....

கோமல்: இப்ப நாம் சந்திக்கிறது முன்னுள் கிளாஸ்மேட்டாகத்தான். தாராளமாக 'வாடா... போடா'ன்னே பேசிக்கலாம்.

மேஜர்: சரி...வாடா கோமல் ...சினிமா ஃபீல்டுல சீரியஸா இறங்கிட்டே போல இருக்கு. உன் 'இந்தியக் கனவு' படம் எதுவரைக்கும் முடிஞ்சிருக்கு?

கோமல்; படம் முடிஞ்சு போச்சு. சென்ஸார்ல சில பிரச்னைகள். ஒரு வழியா 'யூ' சர்ட்டிபிகேட்டே கொடுத்துட்டாங்க. ஆமா்ம்... என்ன ஆள் கொஞ்சம் டல்லா இருக்கே?

மேஜர்: அவுட்டோர் அது இதுன்னு அலைச்சல்தான். போன வருஷம் ஒரு படத்துக்கு அவுட்டோர் ஷூட்டிங்குக்காகப் பெரியகுளம் போயிருந்தேண்டா. நானும் டைம் கிடைச்சா, ஸ்கூல் பக்கம் போகணும்னு நெனைச்சேன். ஆனு நேரமே கெடைக்கல.

கோமல்: பெரியகுளத்து ஸ்கூல் நாட்களை மறக்க முடியுமா என்ன? நாம ரெண்டு பேரும் முதல் முதல்ல எப்போ சந்திச்சோம்னு ஞாபகம் இருக்கா? எங்க அப்பா பெரியகுளத்துக்கு மாற்றலானதும், குடும்பத்துடன் பெரியகுளம் வந்தோம். வந்த மறுநாள் ஆற்றங் கரையில் விளையாடிக்கிட்டிருந்தீங்க நீங்க எல்லாம். நான் ஊருக்குப் புதுசு. தூரத்தில நின்னு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன். அப்ப நீ வந்து பேசினே! நாம ரெண்டு பேரும் ஃப்ரெண்ட்ஸ் ஆனேம்.

மேஜர்: ஆமாம்... ஆமாம்... நீ. நான், கணபதி மூணு பேரும் ஒரு செட். எங்கு போனுலும் ஒண்ணுவே போவோம்.

கோமல்: எஸ். எஸ். எல். ஸிக்கு அப்புறம். ரெண்டு பேருக்கும் ஒரே காலேஜ்ல இடம் கிடைக்கலியே!

மேஜர்: அதனுல என்ன? உனக்கு மதுரா காலேஜ்லேயும், எனக்கு அமெரிக்கன் காலேஜ்லயும் இடம் கிடைச்சுது. ஆனுலும் நாம ரெண்டு பேரும்தான் வாரா வாரம் மீட் பண்ணுவமே. ஒரு வாரம் நீ என்னைப் பார்க்க வருவே! அடுத்த வாரம் நான் உன்னைப் பார்க்க வருவேன்!

கோமல்: நீ என்னைப் பாக்க வந்துட்டு, என் ஹாஸ்டல் ரூம்லயே சில தடவை தங்கிடுவே. எட்டரை மணிக்கு ஹாஸ்டலில் வார்டன் ர்வுண்ட்ஸ் முடிச்சுட்டுப் போனதும், பின் பக்கச் சுவர் ஏறிக் குதிச்சு மீனுட்சி தியேட்டர்ல படம் பார்க்கப் போவோமே! ஞாபகமிருக்கா?

மேஜர்: ஆமாம்! ஆமாம்! அப்போதெல்லாம் தமிழ் சினிமா பார்க்கறது மட்டம், காலேஜ் பசங்கன்னு இங்கிலீஷ் படமோ, இந்திப் படமோதான் பார்க்கணும்னு ஒரு 'கிரேஸ்' இருந்ததே!

கோமல்: நாம ரெண்டு பேரும் மெட்ராஸ்ல முதல் தடவையாச் சந்திச்சது ஞாபகமிருக்கா? மியூஸிக் அகாடமில பிந்துசாரர்னு ஒரு டிராமா. உனக்குச் சந்திரகுப்தர் ரோல். அமர்க்களமா நடிச்சே. நாடகம் பார்க்க வந்திருந்த எனக்கு, சந்திரகுப்தரைப் பார்த்த உடனே இவன் நம்ம சுந்தரராஜன் போல இருக்கானேன்னு நெனைச்சேன். நாடகம் முடிஞ்சதும் மேடைக்கு வந்து ''ஏண்டா! நீ சுந்தரராஜன்தானேன்?''னேன். ''ஆமாம்!

# சந்தித்தார்கள்

உன் ஃபிரெண்ட் பெரியகுளம் சுந்தர ராஜனேதான்''னு சொன்னே.

மேஜர்: ஏன்டா டிராமாவிலே யெல்லாம் நடிக்கிறேன்னு கேட்டே. 'நீ நாடகம் எழுதும்போது நான்நடிக்கக்கூடாதா'ன்னு கேட்டேன் நான். அப்புறம் கொஞ்ச நாள் நாம மீட் பண்ணவே யில்லே. திடீர்னு ஒரு நாள் மினர்வா தியேட்டர்லே சந்திச்சோம்.

கோமல்: அப்போதான் எனக்கு ஒரு நாடகம் எழுதித் தாயேன்னு கேட்டே. நானும் 'அப்பாவி'ன்னு ஒரு டிராமா எழுதித் தந்தேன்.

மேஜர்: நீ எனக்கு மொத்தம் நாலு டிராமா இதுவரைக்கும் எழுதிக் கொடுத்திருக்கே இல்லே?

கோமல்: ஆமா... அப்பாவி, டெல்லி மாப் பிள்ளை, அவன் பார்த்துப்பான், ஜூலியஸ் சேகர்... நாலும்.

மேஜர்: ஆனாலும் எனக்கு நீ எழுதினதுல ரொம்பப் பிடிச்சது 'தண்ணீர் தண்ணீர்'தான். இட்ஸ் எ கிளாஸிக்! அது படமானபோது உன்னோட கதைக்குப் பரிசு கிடைக்காமப் போனதுல எனக்கு ரொம்ப வருத்தம்டா! டேய்! எனக்கு ஒரு பர்ஸ்ட் கிளாஸ் டிராமா எழுதிக் குடேன்.

கோமல்: ஓ. கே! எழுதிக் குடுத்தாப் போச்சு! ஆனா நீதான் சினிமால பிஸி ஆச்சே! நாடகம் போட ஏது நேரம்?

மேஜர்: பத்து நாள் ஷூட்டிங்ல கிடைக்கிறதை விட, ஒரு நாள் டிராமா போடும் போது அதிகமா திருப்தி கிடைக்குது. கோமல்! நான் சமீபத்துல ரெண்டு மூணு டிராமா பார்த்தேன். (பெயர்களை நிருபரிடம் சொல்லிவிட்டு, பெயர்களைப் போட வேண்டாம் என்று கண்டிஷனும் போடுகிறார்.) எவ்வளவு மட்டமா இருக்கு தெரியுமா? சம்பந்தமே இல்லாம காமெடின்னு சொல்லி அபத்தங்களைக், கதையோட ஒட்டாமதிணிச்சு,கொலை பண்ணிட்டாங்க. இப்படி யெல்லாம் டிராமா போட்டு என்தான் நேரத்தை வேஸ்ட் பண்ணுறாங்களோன்னு வருத்தப்பட்டேன்.

கோமல்: அது உண்மைதான். மேடை நாடகங்கள்ல ஒரு சீரியஸ்னஸ் இல்லாம போயிடுத்து இப்போ!

மேஜர்: டேய் கோமல்! உனக்கு ஒரு சின்ன அட்வைஸ். நீ எல்லாமே எக்ஸ் பரிமெண்டல் படமா பண்ணாதே! உன்னால கமர்ஷியல் படத்தையும் தர முடியும். ஆர்ட் ஃபிலிமும் தர முடியும். நீ முதல்ல உன்னை ஒரு சக்ஸஸ்ஃபுல் கமர்ஷியல் டைரக்டரா எஸ்டாப்ளிஷ் பண்ணிக்கோ.அப்புறம் நீ ஹெவி சப்ஜெக்ட்டுகளைத் தந்தாக் கூட ஜனங்க ஈஸியா ஏத்துப்பாங்க.

கோமல்: உன் அட்வைஸுக்கு ரொம்ப தாங்க்ஸ் மேஜர்! நாம பழைய கிளாஸ் மேட்ஸ் என்கிற முறையில சந்திக்கிறப்போ எவ்வளவு சந்தோஷமா இருக்கு தெரியுமா?

மேஜர்: கோமல்! உனக்கு இன்னிக்கு ஈவினிங் என்ன புரோகிராம்? ஃப்ரீயா இருந்தா, என்னோட ''இன்று நீ நாளை நான்'' பட புரொஜக்ஷன் இருக்கு. வாயேன்.

தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி**
படம்: **உத்ரா**

---

## வாசகர் கருத்து

- 'ஒரு சங்கமத்தைத் தேடி...' ஒவ்வொரு வாரமும் துடிப்பை ஏற்படுத்திய கதை. புதுமையும் பழமையும் கலந்த ஒரு பெண்ணை தாரா, சிறந்ததொரு பாத்திரப் படைப்பு. அவள் எடுத்த முடிவும் சரியான தொன்றே. நினைவில் நிற்கக் கூடிய கதை. ஆசிரியை வாசந்திக்கு வாழ்த்துக்கள்.
தேனி ச. புவனேந்திரன்

- வாஸந்தியின் 'ஒரு சங்கமத்தைத் தேடி' யில் ஜே. கிருஷ்ணமூர்த்தியின் பாதிப்புகள் நிறையவே வந்து எங்கள் உள்ளங்களில் சங்கமித்துவிட்டன. தாராவும் அத்தையும் பெண் குலத்திற்கே பெருமை சேர்க்க வந்த பட்டை தீட்டிய வைரங்கள். வாஸந்தி அவர்களுக்குப் பெண்கள் சார்பாக என் நன்றிகள்.
மதுரை-3 மேரி தேவநாதன்

- A novel should be like an ice-axe to break the sea frozen inside us என்ற Kafkaவின் வாக்கியம், வாசந்தியின் 'ஒரு சங்கமத்தைத் தேடி' நாவலுக்கு மிகப் பொருத்தமாகப் படுகிறது. ஆழமான கதை, அழுத்தமான நடை, 'அத்தை'யின் மாறுபட்ட பாத்திரப் படைப்பு — என்று வெகு உயர்வான நாவல்கள் வரிசையில் இடம் பிடித்து விட்டது.
சென்னை—18 சாருகேசி

- தாராவை ஒரு சங்கமத்தைத் தேடித் தவிக்கவிட்ட வாஸந்தியின் அடுத்த கதை எப்போது என்று வாசகர்களாகிய நாங்களும் தவித்துக் கொண்டிருக்கிறோம். ராமுவின் படங்கள் உணர்ச்சி பூர்வமாய் இருந்தன.
கரூர்-2 கே. என். இராமகிருஷ்ணன்

- வாஸந்தியின் எழுத்து சங்கமத்தில் இருபத்தெட்டு முறை மூழ்கி மூழ்கி எழுந்தபோது மனகலேசாய், பரிசுத்தமாய், பூவாய்மலர்ந்து மலர்ந்து புளகாங்கிதம் அடைந்தது.
மதுரை-3 எஸ். கருணிமலை





# அழகிய மக்கள் அற்புத திரைப்படம்

அர்த்தமுள்ள வார்த்தைகளைத் தலைப்பிலே கொண்டிருக்கும் அழகிய படம் Beautiful People. ''அழகிய மக்கள் – சிலர் இவர்களை மிருகங்கள் என அழைப்பர்!'' என்பது முழு நீளத் தலைப்பு.

உண்மைதான்; நாகரீக முன்னேற்றம் அடைந்து விட்டதாகக் கூறிக் கொள்ளும் மனிதர்கள் செய்யும் பல காரியங்களைப் பார்க்கையில் மிருகங்கள் எவ்வளவோ தேவலாம் என்றுதான் தோன்றுகிறது. கூடி வாழும் தன்மை, ஒருவருக்கொருவர் உதவும் பான்மை, குஞ்சு குட்டிகளைக் காக்கும் பண்பு, வாழ்க்கையை அனுபவித்து ரசிக்கும் குணம், துன்பங்களுடன் போராடி வெற்றி கொள்ளும் முயற்சி போன்ற பலவற்றை மிருகங்களிடமிருந்து நாம் கற்றுக் கொள்ளவேண்டியிருக்கிறது என்பதைப் படம் உணர்த்துகிறது.

ஒரே ஒரு பனித் துளி ஒரு பட்சிகளின் காலனியே அழிந்து போகக் காரணமாக இருக்க முடியுமா? ஒரு மீன் எதிரி நெருங்கும் போது தன் குஞ்சுகளை விழுங்கிவிட்டுப் பிறகு வெளியேற்றுமா? பாம்பு வளைந்து நெளிந்து பக்கவாட்டிலேயே வேகமாக விரையுமா? தன் தலையை விடப் பத்து மடங்கு பெரிதான முட்டையை ஒரு பாம்பு விழுங்க முடியுமா? எங்கும் ஒரு பொட்டுத் தண்ணீர் காணப்படாதபோது குரங்கு ஒன்றினைப் பிடித்து அதன் மூலம் நீர் உள்ள இடத்தை அறிவது சாத்தியமா?

இப்படி எத்தனையோ அதிசயமான கேள்விகளுக்கு 'முடியும்' என்று பதிலளிக்கிறது திரைப்படம். ஒரு லட்சம் மைல்கள் பயணம் செய்து நான்கு ஆண்டுகள் உழைத்து உருவாக்கிய படம். 5 லட்சம் அடி ஃபிலிமை உபயோகித்துப் படம் பிடித்த பிறகு 10 ஆயிரம் அடிக்கு எடிட் செய்து விறுவிறுப்பான படமாகத் தயாரித்திருக்கிறார்கள்.

எங்கே இத்தனை பாடு பட்டிருக்கிறார்கள் தெரியுமா? ஆப்பிரிக்காவின் நாமிப், கலஹாரி பாலைவனங்களில்! சில ஆதிவாசிகள் தவிர மனித சஞ்சாரமே இல்லாத அந்தப் பாலைவனத்தில் உயிர்வாழ ஏராளமான மிருகங்கள் போராடுகின்றன. ஒரு மழை அந்தப் பாலைவனத்தை வண்ணப் பூஞ்சோலையாக மாற்றுகிறது; மறுபடி இரக்கமற்ற வெய்யிலின் உக்கிரம் அதனை மணற்பாங்கான பூமியாக்குகிறது. இந்தக் கொடிய சூழலில் சென்று படமெடுத்து அதை ஓர் அற்புத காவியமாக்கியிருக்கிறார்கள். அத்துடன் பின்னணி இசை பொருத்தமாக இழைந்து மெய்சிலிர்க்க வைக்கிறது.

பின் குறிப்பு: படத்துக்கு முன்னால் பறக்கும் தட்டு (Frizby) விளையாட்டு பற்றி ஒரு துணுக்குப் படம் காண்பிக்கிறார்கள். ஒவ்வொரு கணமும் ''அடேயப்பா!'' தான். எனவே தாமதமாகச் செல்லாதீர்கள்!

-குட்டி கிருஷ்ணன்







● வனவிலங்கு சரணாலயம்

# ஜம்மென்றிருக்கிறது ஜாம்பியா

ஜாம்பியா அந்நிய தேசம் போலவே தோன்றவில்லை. இந்தியாவில் இருப்பது போலவே நினைப்பு. காரணம் இந்தியர்கள் கணிசமான அளவில் அங்கு காணப்படுவது தான். முக்கியமாகக் குஜராத்திகள். அக்க வுண்டண்ட்டுகளுக்கு அங்கு ஏக கிராக்கி. பொதுவாக இந்தியர்களிடம் ரொம்ப மதிப்பு வைத்துள்ள மக்கள் அவர்கள்.

இந்திய டாக்டர்கள் சங்கம், இன்ஜினியர்கள் சங்கம் எல்லாம் இருக்கிறது.

● ஜாம்பியாவுக்கு முன்பிருந்த பெயர் சதர்ன் ரொடீஷியா. சுதந்திரத்துக்குப்பின் ஜாம்பஸி நதியை நினைவூட்டும் வகையில் ஜாம்பியா ஆயிற்று.

● விலைவாசி அதிகம். ஆனால் எல்லாமே தாராளமாகக் கிடைக்கிறது. ஒரு தேங்காய் 20 ரூபாய். பத்து ரூபாய் என்பது அவர்களுடைய ஒரு குவாச்சாவுக்குச் சமம். மாமரங்கள் மிகுதி. பழம் ரொம்பச் சுவை.

● இலங்கையில் சர்வதேச இந்துமத மகாநாட்டினைத்திறம்படநிர்வகித்து நடத்தித் தந்தவரில் முக்கியமானவர் கி. லக்ஷ்மணன். ஈழ அரசில் ''வித்யாதிபதி''யாக விளங்கி ஓய்வு பெற்றவர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இவருடன் படித்தவர்கள் நெடுஞ்செழியன், அன்பழகன். ''இந்திய தத்துவ ஞானம்'' நூல் எழுதி ஈழம், தமிழகம் இரண்டிலும் பரிசு பெற்று இணைப்புப் பாலமாகக் கருதப்படுகிறவர். இவர் அண்மையில் ஜாம்பியா சென்றிருந்தார். தொடர்ந்து கூறினர்:

● ஜாம்பியாவின் மொத்த ஜனத்தொகை ஆறு மில்லியன்தான். (பம்பாயில் மட்டும் 8 மில்லியன்.) கார்கள் மணிக்கு 120 கி. மீ. வேகத்தில் ஓடுகின்றன. விபத்துக்கள் என்ற நாமதேயமே கிடையாது.

● எல்லா இடங்களும் சுத்தமாக இருக்கின்றன. குப்பை போடுவது, சுவரில் எழுதுவது, போஸ்டர் ஒட்டுவது எல்லாம் பார்க்க முடியாது.

● மக்கள் யாரைப் பார்த்தாலும் ''குட் மார்னிங்'' கூறிப் புன்னகைக்கிறார்கள். அறிமுகமில்லாதவராயினும் சரி, வணக்கம் தெரிவிக்கிறார்கள். பெண்களுக்குப் பாதுகாப்பு அதிகம். பெண்களைக் கேலி செய்தல், ஈவ் டீஸிங், கற்பழிப்பு போன்ற ஏதும் கேள்விப்படவில்லை. ஆனால் திருட்டு உண்டு.

● கென்னத் கௌண்டா கட்சித் தலைவர் — நாட்டின் தலைவர். எதிர்க்கட்சி இருந்தாலும் வலிமையாக இல்லே. கௌண்டா மக்கள் வாழ்விலே அக்கறை உள்ளவர் எனப் போற்றப்படுகிருர்.

● முக்கிய மதம் கிறிஸ்துவ மதம். அடுத்து இஸ்லாமியமதம். கென்னத்கௌண்டா கிறிஸ்துவர் என்ருலும் சர்வமதசமரசவாதி. அண்மையில் ராதாகிருஷ்ண கோயிலுக்கு அடிக்கல் நாட்டினர். மக்கள் எல்லோரும் புலால் உண்பார்கள்; ஆனல் கௌண்டா பியூர் வெஜிடேரியன். சிகரெட், மது எதுவும் தொட மாட்டார். எல்லாருக்கும் ரொம்பப் பிடித்தது கேழ்வரகுக் களி.

✖ விக்டோரியா அருவி





✖ திரு. லக்ஷ்மணன்

● ரயில், பஸ் குறைவு. முக்கால்வாசி மக்களிடம் கார் இருக்கிறது.

● வனவிலங்கு சரணலயங்களில் எல்லா மிருகங்களும் சுதந்திரமாகப் பவனி வருகின்றன.

● முக்கியத் தொழில் விவசாயம். அடுத்து தாமிரச் சுரங்கங்கள். தங்கம், வைரத்துக்கு மக்கள் ஆசைப்படுவதில்லே. சனி, ஞாயிறு விடுமுறை. வேலே நிறுத்தம், கதவடைப்பு போன்றவை இல்லே. இளைஞர்கள் நாட்டை உயர்த்துவதில் குறியாக இருக்கிருர்கள்.

● ஆண்கள் உடல் முழுவதையும் மறைக்கும் அங்கி போன்ற உடையும், பெண்கள் பாவாடை ஜாக்கெட்டும் அணிகிருர்கள். எல்லாரும் இசை, நடனத்துக்கு அடிமைகள்.

● அதிகார பூர்வமான மொழி: ஆங்கிலம்.

பேட்டி: ராமச்சந்திரன்

சேலத்திலிருந்து அயோத்தியா பட்டணம் செல்லும் தனியார் துறை பேருந்து (B.R.P. விட்)களில் பஸ்ஸை இரண்டாகப் பிரித்து ஒரு பகுதியை ஆண்களுக்கும் ஒரு பகுதியைப் பெண்களுக்கும் ஒதுக்கி விட்டிருக்கிருர்கள். இரு பகுதிகளிலும் ஏறவும் இறங்கவும் தனித் தனிவாசல். ஆக நாலு வாசல்கள் அமைத்திருக்கிருர்கள். பெண்கள் பகுதிக்குப் பெண் கண்டக்டர் தனியே இயங்குகிருர். ஆண்கள் மீது உரச, இடித்துக் கொள்ள நேர்கிற தொல்லே பெண்களுக்கு இல்லே. ரொம்ப வசதியாக இருக்கிறது.

—வா. கோ. பா.












நெடுமாறன் தியாகப் பயணம்

கருணாநிதி அன்பழகன் ராஜினாமா

இலங்கைத் தமிழர்







**கல்கி**

1983 ஆகஸ்டு 21
ருத்ரோத்காரி ஆவணி 5
மலர் : 42 இதழ் : 3

# அனுமன் போல் செயல்படுவோம்!

இலங்கையில் தமிழர்களுக்கு இழைக்கப்பட்டுள்ள அநீதிகளுக்காக ஜனாதிபதி ஜெயவர்த்தனே மேல்நாட்டுப் பத்திரிகைகளின் கடுமையான கண்டனத்துக்கு உள்ளாகியிருக்கிறார் என்பதை எடுத்துக்காட்டும் கருணாநிதி, அதே பத்திரிகைகள் இந்திரா காந்தி பொறுமையுடனும் நிதான புத்தியுடனும் நடந்து கொண்டிருப்பதைப் பாராட்டுகின்றன என்பதைக் கண்டும் காணாது இருந்து வருகிறார்.

ஈழத் தமிழர்களில் தீவிரவாதிகளுக்கு அதி தீவிர ஆதரவு காட்டி இரைச்சலிட்டும் ஆர்ப்பாட்டம் நடத்தியும் வரும் தமிழகத் தலைவர்கள், இலங்கைத் தமிழர் பிரச்சினைக்கு நிரந்தரத் தீர்வு காண எந்த விதத்திலும் உதவவில்லை. முட்டுக்கட்டைதான் போடுகிறார்கள்.

இந்தச் சூழ்நிலையில் இலங்கை ஜனாதிபதியின் தூதுவராக வந்துள்ள அவர் தம்பி ஜெயவர்த்தனே, தமிழ் நாட்டில் தீவிரவாதிகளுக்குத் தரப்படும் ஆதரவு,பாதுகாப்பு பற்றிப் புது தில்லியில் பிரதமரிடம் பேசுவார் என்பதில் ஐயமில்லை. தம்பி ஜெயவர்த்தனே விசேஷ அதிகாரங்களுடன் வந்திருப்பதாகத் தெரியவில்லை. நல்லெண்ணத் தூதுவராகக் கருத்துப் பரிமாற்றங்களுக்கு உதவுவார். இலங்கைக் கலவரங்களை யொட்டி அயல் தேச ராணுவ உதவி ஏதும் கோரப்படவில்லை; இப்போது கலவரங்கள் அடங்கி அமைதி நிலவ ஆரம்பித்து விட்டது என்ற விவரங்களை மத்திய அரசுக்கு உணர்த்துவதுடன், கலவரங்கள் நிகழ்ந்ததற்கான காரணங்களையும் அந்தரங்கமாக விளக்கிக் கூறுவார். மேற்கொண்டு நடக்க வேண்டிய காரியங்கள் குறித்தும் ஆலோசனை நடத்துவார்.

முதல் பணி துயர் துடைப்பும் புனர் நிர்மாணமும். ஏராளமான தொழில்-வர்த்தக நிறுவனங்கள் அழிந்து விட்டிருக்கின்றன. இலங்கையின் பொருளாதாரமே பல ஆண்டுகள் பின்னோக்கிச் சென்றுவிட்டது. மக்கள் அடைந்துள்ள துன்பமோ சொல்லி மாளாது. மக்கள் புனர்வாழ்வு பெறவும் பொருளாதாரம் மறுபடி மேன்மையுறவும் உலக நாடுகளை உதவ வேண்டுமெனில் இந்தியாவுக்கு உள்ள பொறுப்பு பற்றி எவ்வளவு அதிகமாக வலியுறுத்தினாலும் போதாது. சஞ்சீவி பர்வதத்துடன் பாய்ந்த அனுமன் போல் நாம் செயல்பட வேண்டும். 'கலவரங்களில் நாசமடைந்த சொத்துக்களை அரசுடைமை ஆக்கியது மீண்டும் உரியவர்களிடம் திருப்பித் தருவதற்கே' என்ற ஜனாதிபதி ஜெயவர்த்தனேயின் அறிக்கை நம்பிக்கை ஊட்டுகிறது.

உடனடி நிவாரணப் பணிகளை அடுத்து, எதிர்காலத்தை நோக்க வேண்டும். எந்த ஓர் இனத்தவருக்கும் அவர்களுடைய மொழி, கலாச்சாரம் முதலியவற்றுக்கு உரிய மதிப்பளித்து, பெரும்பான்மையினருக்கு நிகரான அந்தஸ்து கொடுத்து, தேச ஒற்றுமைக்குக் குந்தகம் விளையாத அளவில் பிரதேச சுயாட்சியையும் ஊக்குவிக்காதவரையில் பிரிவினை வாதம் வலுப்பெற வாய்ப்புண்டு. இது இலங்கைக்கு மட்டுமல்ல, இந்தியாவுக்கும் பொருந்தும் உண்மை.

ஃபீனிக்ஸ் என்ற பறவை பற்றிக் கிரேக்க புராணம் கூறுகிறது. அது தன்னைத் தானே எரித்துக் கொண்டு சாம்பலான பிறகு அந்தச் சாம்பலிலிருந்து புத்துயிரும் புதிய பலமும் பெற்று மேலெழுந்து பறக்குமாம்! அவ்வாறே இன்று எரிந்து சாம்பலாகியிருக்கும் இலங்கைத் தமிழர்—சிங்களவர் ஒற்றுமை, அந்தச் சாம்பல் குவியலிலிருந்தே புத்துயிர் பெற்று எழுவதுடன் பலப்படவும் வேண்டும் என்று விரும்புகிறோம்.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



○ சுந்தரமூர்த்தி: இதுபோல இந்த சீட்டு என்னது! இதை உன்னாலே பேசக முடியாது!
விசுவநாதன்: அப்பப்படி ஸார் இந்த வீட்டை எனக்கு குடுக்க முடியும்!

# மாறுதல் வரும்

முன்னுரையாக—

நாடகக் கலை பற்றிய ஆழ்ந்த ஞானத்தோடும், தீவிர மனிதாபிமானத்தோடும், ஆவேசமெனச் சொல்லக் கூடிய சமூகப் பிரக்ஞையோடும் ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன் நாடகம் எழுதத் துவங்கிய சுஜாதா முதலில் இரண்டு ஓரங்க நாடகங்களைத்தான் எங்களுக்கு எழுதிக் கொடுத்தார். ''ஒரு கொலை -- ஒரு பிரயாணம்''; அதைத் தொடர்ந்து, ''கடவுள் வந்திருந்தார்'', ''அடிமைகள்'', ''டாக்டர் நரேந்திரனின் விநோத வழக்கு'' ஆகிய வெற்றி நாடகங்களை எழுதிக் கொடுத்து எங்களைப் பெருமைப் படுத்தினார். சுஜாதாவின் நாடகங்களை மேடை ஏற்றும் பேறு பெற்ற எங்கள் பூர்ணம் நியூ தியேட்டரின் சார்பில் நான் ஓரங்க நாடகங்களில் எனக்குள்ள வெறியை அவரிடம் சமீபத்தில் வெளியிட்டேன். ''ஆ! ஓரங்க நாடகம் என்றுல்எனக்குலட்டுமாதிரி'' என்று சுஜாதா என் யோசனையை அந்தக் கணமே ஏற்றுக் கொண்டு, ஏகப்பட்ட உற்சாகத்துடன் துரிதமாகவே மூன்று ஓரங்க நாடகங்களை எழுதிக் கொடுத்தார்.

'மாறுதல்'', 'வாசல்'', ''கிருஷ்ணு!-கிருஷ்ணு!'' என்ற இந்த மூன்று நாடகங்களிலும் மூன்று வகையான மாறுதல்களை சுஜாதா வற்புறுத்துகிருர். இதற்கு முன் ஆனந்த விகடனின் நாடகச் சிறப்பிதழில் அவர் எழுதியிருந்த ''வந்தவன்'' என்ற நாடகத்திலும் இன்னெரு வகையான மாறுதல் மையக் கருத்தாக அமைந்திருந்தது. அதை நாலாவது நாடகமாக எடுத்துக்கொண்டோம். அனைத்துக்கும் பொதுவாக ''மாறுதல் வரும்'' என்ற தலைப்பையும் சுஜாதாவே கொடுத்தார். நான்கு நாடகங்களிலும் ஆழப் பதிந்துள்ள சமூக நோக்கம் ஒரு நாடக ஆசிரியராக சுஜாதா எடுத்துள்ள விசுவரூபத்தை இன்னும் அழுத்திக் காட்டுகிறது.

சுஜாதாவின் ''மாறுதல் வரும்'' நாடக நிகழ்ச்சியை பூர்ணம் நியூ தியேட்டர் குழுவினர், கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ் ஆதரவில் சென்னையில் மயிலை ரசிக ரஞ்சனி சபா அரங்கில் முதன் முதலாக மேடையேற்றினுர்கள். நாடகங்களைப் பார்க்கும் இன்பம் ஒருபுறமிருக்க, அவற்றைப் படிக்கும் இனிமையான அனுபவத்தை ''கல்கி'' தனது லட்சக் கணக்கான வாசகர்களுக்குத் தருகிறது.

—பூர்ணம் விஸ்வநாதன்

## ''மாறுதல்''

சுந்தரமூர்த்தி —பூர்ணம் விசுவநாதன்
நாடகாசிரியர் விசுவநாதன் —பல்தேவ்
நடிகை ராதா —சிவரஞ்சனி
சபா செகரட்டரி ராமன் —ரமேஷ்

புகைப்படங்கள் —ரங்கேஷ்

[மேடை காலியாக இருக்கிறது. ஏறக்குறைய நடுவில் வரிசையாகப் பத்துப் பதினைந்து நாற்காலிகள் போடப் பட்டிருக்கின்றன. அவைகளில் ஒன்றில் சுந்தரமூர்த்தி

உட்கார்ந்திருக்கிறார். நாற்பத்தைந்து வயது இருக்கலாம். ஒரு குடை மேல் கை வைத்துக் கொண்டு பையுடன் அந்தச் சின்ன இடம் தனக்குச் சொந்தம் போல் உட்கார்ந்திருக்கிறார். நேர் பார்வை பார்த்துக் கொண்டு, உலகத்தில் நடப்பதெல்லாம் தமக்குச் சம்பந்தமே இல்லை போல, எதற்கோ காத்திருப்பது போல, உட்கார்ந்திருக்கிறார். ஒருமுறை கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டு, அதை ஆட்டிச் சாவி கொடுத்துவிட்டு, காதில் வைத்துக் கேட்கிறார். அப்போது ஓர் இளைஞன் வருகிறான். பெயர் விசுவநாதன். சற்று சாந்த சுபாவத்துடன், தன்னிடம் இருக்கும் பாஸை ஒரு முறை பார்த்துக் கொண்டு, நாற்காலியில் எழுதியிருக்கும் ஸீட் நம்பர்களைச் சரிபார்த்து, தன் இடத்தில் அவர் உட்கார்ந்திருப்பதை உணர்ந்து....]

விசுவநாதன்: உங்க நம்பர் என்ன?
சுந்தரமூர்த்தி: ஏ-ஏழு.
விசு: எனக்கும் ஏ-ஏழு கொடுத்திருக்கிறார்களே!
சுந்தர: எங்கே, காட்டு.
(விசு காட்டுகிறான்).
சுந்தர (சற்று ஆச்சரியத்துடன்): இது தப்பு. நான் இருபது வருஷமா இந்த சபாவிலே மெம்பரா இருக்கேன். இருபது வருஷமா இந்த ஏ-ஏழிலே உக்காந்திருக்கேன். இதே லொடக்காசி நாற்காலியில...
(டிக்கட்டை மறுபடி பார்க்கிறார்.)
நீ என்ன மெம்பரா? உன்னைப் பார்த்ததே இல்லையே! புதுசா?
விசுவ: ஆமா சார்.
சுந்தர: ஏ-ஒண்ணு இருக்கும். சில வேளையில ஒண்ணுக்கும் ஏழுக்கும் வித்தியாசம் தெரியாது.
விசுவ: இல்லை சார். ஏழுதான் சார், குறுக்கக் கோடு போட்டிருக்கு. தலை மேலேயும் நல்லா கோடு இருக்கு, ஸ்க்-ஷெட் மாதிரி.
சுந்தர: ஏ-பதினேழா இருக்கும்.
விசுவ: பதினேழு நாற்காலியே இல்லையே. இது ஏழுதான். நீங்க கொஞ்சம்....
சுந்தர: என்ன இது. தப்பா நம்பர் வாங்கிண்டு வந்துட்டு, என் ஸீட்டைக் கேக்கறியே?
விசுவ: யாரையாவது கேட்டுப் பார்ப்பமா?
சுந்தர: கேக்கறது என்ன? ஸீட்டு தப்பு. அங்க எங்கயாவது போய் உக்காரு.
(விசு பக்கத்தில் உட்காருகிறான். சுந்தரமூர்த்தி அவனை விரோதத்துடன் பார்க்கிறார்.)
விசுவ: செக்ரட்டரி வரட்டும் ஸார். அவர் தீர்த்து வெக்கட்டும்.
சுந்தர: த பாரு, இந்த ஸீட்டு என்னது. இதை உன்னால பேக்க முடியாது.
விசுவ: அப்ப எப்படி சார் இதே ஸீட்டை எனக்குக் குடுக்க முடியும்?
சுந்தர: அதை என்னைக் கேட்டா! செக்ரட்டரியைக் கேட்டுக்கோ.
விசுவ: கேக்கத்தான் போறேன்.
(கொஞ்ச நேரம் இருவரும் விரோதமாக உட்கார்ந்து கொண்டிருக்கின்றனர். விசு அவர் மேலே படுகிறான்.)

○ விசுவ: இன்னிக்கு என்ன நாடகம்னு தெரியுமா உங்களுக்கு? சுந்தர: தெரியாது!
பெண்: தெரியாமையா நாடகம் பார்க்க வரீங்க?

## சுஜாதா



உடனே வெளிப்படையாக ஒரு சண்டையே துவங்குகிறது.)

சுந்தர: கொஞ்சம் தள்ளித்தான் உட்காரேன். எம் மடிலயே உக்காருவே போல இருக்கே. அந்த ஸீட்டெல்லாம் காலியாத்தானே இருக்கு!

விசுவ: அதில ஆள் வந்துட்டான்னு?

சுந்தர: இதுல மட்டும் ஆள் வரமாட்டானு?

விசுவ: ஆர்கனேஸேஷன் ரொம்ப புவர்!

சுந்தர: அதைச் சொல்லிட்டுப் போ.

(ஒரு பெண் வருகிறாள் வலது பக்கத்திலிருந்து. அவள் முகத்தில் ஒப்பனை தெரிகிறது. நாடகத்துக்குத் தயார் ஆகிறவள் போல இருக்கிறாள். சற்று வசீகரமாக இருப்பதை அவர் பார்க்கிறார். சற்று அவர் போக்கில் மாறுதல் தென்படுகிறது.)

பெண்: அண்ணா, ஸீட்டு கிடைச்சுதா?

விசுவ: எங்க! எனக்குக் குடுத்த அதே ஸீட் நம்பர்லே இவரு ஒக்காந்திருக்காரு.

பெண்: ஐயோ, அது எப்படி?

(குறுக்கே வந்து சுந்தரமூர்த்தியிடம் அதட்டலாக)

சார், உங்க டிக்கட்டைக் காட்டுங்க.

சுந்தர: இத பாரும்மா, நான் இந்த சபாவில நீ பொறக்கறதுக்கு முன்னாடில இருந்தே மெம்பர்; இதே ஸீட்டைத் தேச்சுக்கிட்டு இருக்கறவன்.

பெண்: அதெப்படி ஸார், உங்க நம்பர் இவனுக்கும் கொடுத்திருக்காங்க! வேறே ஏதாவது ஏ-லெவன் இருக்கா?

(அவர் பக்கத்தில் உட்காருகிறாள்)

உங்க டிக்கட்டைப் பார்க்கலாமே!

சுந்தர: டிக்கட்டு எல்லாம் என்கிட்டக் கிடையாது. நான் மெம்பர்ங்கறேன்.

பெண்: மெம்பர்ஷிப் கார்டைக் காட்டுங்க.

சுந்தர: எதுக்குக் காட்டணும்? காட்ட வேண்டிய அவசியமில்லே.

பெண்: காட்டலேன்னு ஸீட்டையாவது விடுங்க. இவன் கிட்ட ஏ-லெவன் இருக்கில்லே!

''முதல்லே யார் முத்தம் கொடுக்கிறது என்கிறதுல எனக்கும் என் மனைவிக்கும் கடுமையான போட்டி!''

''இந்த வயசில உங்க ரெண்டுபேருக்கும் ஏன் இப்படிப்பட்ட ஆசையெல்லாம்?''

''அட, நீங்க ஒண்ணு! பேரக் குழந்தைக்குத்தான் முத்தம் கொடுக்கிறதில போட்டி!''

—கடலூர் கன்னியப்பன்



சுந்தர: என்னடாது எழவாப் போச்சு! நான் எத்தனை வருஷமா இதே ஸீட்டில...

பெண்: அப்ப மெம்பர்ஷிப் கார்டைக் காட்டுங்க.

சுந்தர: கார்டு கொண்டு வரலே. செக்ரடரி வரட்டும். அந்தாளுக்கு என்னை நல்லாத் தெரியும்.

பெண்: என்ன ஸார், இப்படித் தகாத இடத்துல வந்து உக்காந்துக்கிட்டுத் தகராறு பண்றீங்க?

சுந்தர: நான் தகராறு பண்றேனு? நானு? சரியாப் போச்சு! நீ அப்படிச் சொல்லலாமா?

விசுவ: ராதா விட்டுரு. செக்ரட்டரி வந்தப்புறம் பார்த்துக்கலாம்.

பெண்: இல்லே அண்ணா. அப்புறம் கூட்டம் ஜாஸ்தி வந்துரும். அதனாலதான் உன்னை முன்னால வந்து உக்காரச் சொன்னேன். அதுக்குள்ளே... (குரலைத் தாழ்த்தி) கல்லுளி மங்கனுட்டம்!

(சுந்தரமூர்த்தி திரும்பிப்பார்க்கிறார்)

செக்ரட்டரி வரட்டும். வீ வில் எவிக்ட் ஹிம். நாடகத்தை எழுதினது நீ! ஒனக்கு இந்தச் சலுகை கூடக் கிடையாதுன்னு எப்படி?

(சுந்தரமூர்த்தி திரும்பிப்பார்க்கிறார்)

அதுக்குமேலே நானும் இதில நடிக்கிறேன். இப்ப மட்டும் செக்ரட்டரி இந்த ஸீட்டு உனக்கில்லேன்னு சொல்லட்டும். எல்லாத்தையும் கான்ஸல் பண்ணிட்டு வீ வில் வாக் அவுட்!

விசுவ: அதெல்லாம் வேண்டாம். பெரியவங்களோட நாம அட்ஜஸ்ட் பண்ணிட்டுப் போயிடலாம்.

பெண்: மெம்பர்ஷிப் கூட இல்லேன்னு இவர் கிட்ட!

விசுவ: எதுக்குத் தகராறு? அவங்க வரட்டுமே!

(இதற்குள் சுந்தரமூர்த்தியின் தோரணை சற்று மாறியிருக்கிறது.)

சுந்தர (ராதாவிடம்): என்ன சொன்னே நீ? (விசுவிடம்) இந்த நாடகத்தை நீ எழுதியிருக்கியா?

விசுவ: ஆமா ஸார். இன்னிக்கு என்ன நாடகம்னு தெரியுமா உங்களுக்கு?

சுந்தர: தெரியாது.

பெண்: தெரியாமையா நாடகம் பார்க்க வரீங்க?

சுந்தர: இப்ப எல்லா நாடகமும் ஒரேமாதிரி தானே இருக்கு! ஏதோ ஓரங்க நாடகமோ என்னவோ சொன்னாங்க.

விசுவ: இவ்வளவு வருஷமா நாடகம் பாக்கறேங்கறீங்க. இதுவரைக்கும் இப்படித்தான் என்ன நாடகம்னு தெரியாமலே பார்த்துக்கிட்டு வரீங்களா?

சுந்தர: நாடகங்கறது எதுக்கு?

பெண்: எதுக்கு? நீங்கதான் சொல்லுங்களேன்.

சுந்தர: கொஞ்ச நேரம் வீட்டுக் கவலையை மறந்து சிரிச்சுட்டுப் போறதுக்கு.

விசுவ: உங்க வீட்ல கவலை ஜாஸ்தியா சார்?

சுந்தர: அப்படின்னு இல்லே. சின்னச் சின்ன

கவலைகள்.. எல்லா வீடுகள்லேயும் இருக் கறுப்போல தான்.

பெண்: உங்க ஒய்ஃப் வரலேயா சார்?

சுந்தர: அவ வந்துட்டா வீட்ல சமையல் பண்றது யாரு?

விசுவ: வாஸ்தவம்தான்.

பெண்: என்ன வாஸ்தவம்? அந்தம்மா மட் டும் டிராமா பார்க்க வேண்டாமா?

சுந்தர: அதுக்கு ஒரு எழவும் புரியாது. அழ வேண்டிய இடத்திலே சிரிக்கும்.

பெண்: அவங்களுக்கு அங்கதான் சிரிப்பு வருதோ என்னவோ!

சுந்தர (விசுவிடம்): என்ன டிராமா இன் விக்கு?

விசுவ: என்ன மாதிரி டிராமா உங்களுக்குப் பிடிக்கும்?

சுந்தர: எனக்குப் பிடிக்கிற டிராமா எல்லாம் போயிடுத்தப்பா. அந்தக் காலத்திலே கிட்டப்பா, கே.பி. சுந்தராம்பாள், வி.ஏ. செல்லப்பா, டி. பி. ராஜலட்சுமி டிராமா எல்லாம் பார்த்திருக்கேன். (குரலை உயர்த் திப் பாடிக் காட்டி) 'காயாத கான கத்தே'ன்னு ராத்திரி ஒண்ணரை மணிக் குப் பாட ஆரம்பிச்சான்னா, விடிய விடிய ஒன்ஸ்மோர் கேட்டுண்டிருப்பாங்க. வெங் கலக் குரல். ஒரு இடமி பிசகாது. நவாப் ராஜமாணிக்கம் தெரியுமா? ஒரிஜினல் பாயஸ் கம்பெனின்னு, எட்டு வயசு, பத்து வயசுப் பசங்களை வச்சுண்டு டிராமா நடத்துவான். சம்பூர்ண ராமாயணத் திலே சீதை கிளி கொஞ்சும். அனுமார் சஞ்சீவி பர்வதத்தை எடுத்துண்டு வருவார் ஸ்டேஜ்லேயே மலை பறக்கும்.

விசுவ: அந்த மாதிரி டிராமா இப்பக்கூட போடறாப்பல இருக்கே!

சுந்தர: ப்ச்! இப்ப என்ன பண்றா! உடம்பு பூரா எலக்ட்ரிக் லைட் வெச்சுண்டு பட் டாசு வெடிக்கறா. ராஜமாணிக்கத்தோட ஸ்டேஜ் எஃபெக்ட்ஸ் போயிடுத்து. அப் புறம் சங்கரதாஸ் சுவாமிகள் என்ன! டி. கே. எஸ். பிரதர்ஸ் என்ன! அவ்வையார் பாத்திருக்கியோ நீ? அப்புறம் டி. ஆர் மகாலிங்கம்தான் என்ன! எஸ். வி சகஸ்ர நாமம் என்ன!

பெண்: அதெல்லாம் போயிடுத்து இல்லே?

சுந்தர: அதை நாடகத்தோட பொற் காலம்னுதான் சொல்லணும்.

விசுவ: இப்ப....?

சுந்தர: இப்ப என்ன? வெறும் ஜோக்ஸ், இல்லே அரசியல், இல்லே பிராமண வீட்டுக் கதை. இப்ப என்ன பண்றாங்க? நாட கத்தைப் படிச்சுக் காட்டறாங்க. படுதா வேண்டாம், நாற்காலி வேண்டாம். கண்ணை மூடிண்டாக் கூட நாடகம் பூரா புரியும். நாடகம்கிறது என் காலத்தி லேயே க்ஷீணிச்சுண்டு வரதுப்பா. (ராதா விடம்) இப்ப ஒங்கண்ணா எழுதியிருக்கிற நாடகத்தைச் சொல்லல்ல. பொதுவா நாடகங்களைப் பத்திச் சொல்லிண்டிருக் கேன். நீ தப்பா நெனைக்கக்காதே.

பெண்: நல்ல நாடகங்களைப் பார்க்காம எப்படி சார் நீங்க சொல்ல முடியும்?

சுந்தர: நல்ல நாடகங்கள் இருக்கா, சொல்லு. சரி, பாக்கறேன். ஒனக்காகப் பார்க்கறேன். நன்னா இருந்தா நன்னா இருக் குன்னு சொல்லிட்டுப் போறேன். அந்தக் காலத்திலே நாடக நடிகர் எல்லாம் நன் னாப் பாடுவா. மைக் உண்டோ? கணீர்னு பாடுவா. நேர்த்தியா ஆடுவா. அபிநயம் புடிச்சு ஆடுவா. கடைசி ஸீட்லே இருக்கிற செவிட்டு ஊமைக்குக் கூட நாடகம் புரியற மாதிரி நடிப்பா. நல்ல வன் யாரு, கெட்டவன் யாருன்னு தெளி வாக இருக்கும். படிப்பினை இருக்கும், மாரல் இருக்கும், போதனை....

விசுவ: அதெல்லாம் ஒரு நாடகத்துக்கு வேணும்கிறீங்களா?

சுந்தர: ஆமா. இல்லாம, பின்ன வேற என்னத்த நாடகம்னு சொல்றது? ஜோக் ஃபெஸ்டிவலேயா?

விசுவ: அதுவும் ஒரு வகை நாடகம்தான் ஸார். இப்ப நாடகத்தில பாடினா எழுந்து போயிடுவா. ஜனங்களுக்கு ஆற அமரப் பாட்டுக் கேட்கச் சமயமில்லே.

சுந்தர: உன் அபிப்பிராயத்தில நாடகம்னா என்னன்னு நினைச்சிண்டிருக்கே?

விசுவ: அதைத்தான் பார்க்கப் போறீங் களே?

சுந்தர: என்ன, சொல்லேன்.

விசுவ: சொல்றேன். அதுக்குள்ள இந்தப் பிரச்னையைத் தீர்த்துக்கலாம்னுட்டு...

பெண் (வலப்பக்கம் வெளியே பார்த்து): பிரச்னையைத் தீர்த்துரலாம். செக்ரட்டரி வரார்.

(செக்ரட்டரி வருகிறார். கையில் பை, வாயில் வெற்றிலை பாக்குபுகையிலை சகிதம். ஜிப்பா அணிந்திருக்கிறார்.)

(தொடரும்)



நீதிபதி: சைக்கிளில் லைட் இல்லாமல் போனது உண்மை யென்று ஒப்புக் கொண்டது சரி! லைட் இல்லாமல் போன போது மணி என்ன இருக்கும்?

குற்றவாளி: காலை எட்டு மணிங்க!

நீதிபதி: குற்றவாளியே தன் தவற்றைத் துல்லியமாகச் சுட்டிக் காட்டி ஒப்புக் கொண்டதால் குறைந்த பட்சமாக ஐந்து ரூபாய் அபராதம் விதிக்கிறேன்!

—நெல்லை சுவாதி

# சைட்டாலஜி என்றால் என்ன?

**பொது அறிவு**

இந்த வாரம் க்விஸ் நடந்தது கோயமுத்தூரில். பங்கேற்றோர் டி. எஸ். கிருஷ்ணமூர்த்தி, டி. சொக்க லிங்கம், (அரசினர் தொழில் நுட்பக் கல்லூரி மாணவர்கள்,) எம். ஜெய பாரதி, டி. நிலகவதி (அரசினர் விவசாயக் கல்லூரி மாணவிகள்). வெற்றி பெற்றோர் பெண்மணிகளே.

டாஸில் வென்ற இஞ்ஜினியரிங் கல்லூரி மாணவர்கள் கேட்ட முதல் கேள்வி.
''டாஸ்மேனியா எங்கே உள்ளது?''
விடை:— ஆஸ்திரேலியாவிலிருந்து பாஸ் ஜலசந்தியால் பிரிக்கப்பட்டுள்ள தீவு. இந்தியப் பெருங்கடலில் உள்ளது.
இரு பிரிவினரும் கேட்டுக்கொண்ட மற்றக் கேள்விகளும் அவற்றுக்கான சரியான விடைகளும்.

2) கேள்வி:— 'லுஃப்த்ஹான்ஸா' என்பது எந்த நாட்டு விமான நிறுவனம்?
விடை: மேற்கு ஜெர்மனி.

3) கேள்வி:— ராய்டர், டாஸ் என்பவை என்ன?
விடை:— டாஸ் என்பது சோவியத் ரஷ்யாவின் செய்தி ஸ்தாபனம்; ராய்டர் என்பது இங்கிலாந்தின் செய்திஸ்தாபனம்.

4) கேள்வி:— மாநில கவர்னர், சுப்ரீம் கோர்ட் பிரதம நீதிபதி இவர்களுக்கு மாதச் சம்பளம் எவ்வளவு?
விடை:— ரூ. 5000/-

5) கேள்வி:— டிஸம்பர் 5, 7, 10 இந்தத் தேதிகளின் முக்கியத்துவம் என்ன?
விடை:— டிஸம்பர் 5 — கடற்படைநாள்
டிஸம்பர் 7 — கொடிநாள்
டிஸம்பர் 10 — மனித உரிமை நாள்.

6) கேள்வி:— 'சைட்டாலஜி' என்பது என்ன?
விடை: 'செல்'கள் பற்றிய படிப்பு.

7) கேள்வி:— சமணர்களுடைய புனித நூல் எது?
விடை:— அங்கம்.

8) கேள்வி:— நவரசம்' என்னென்ன?
விடை:— (1)காதல், (2) வீரம், (3)சோகம் (4) ஹாஸ்யம், (5) ஆச்சர்யம், (6) வெறுப்பு, (7) பயம், (8) சாந்தம், (9) கருணை.

9) கேள்வி:— இந்திய பிரதமர்களை முதலிலிருந்து வரிசைப்படி சொல்ல முடியுமா? நேரு, சாஸ்திரி, இந்திராகாந்தி, மொரார்ஜி தேசாய், சரண்சிங், இந்திரா காந்தி.

10) தேர்தலின் போது இரண்டு சுயேச்சை வேட்பாளர்கள் ஒரே சின்னத்தைக் கேட்டால் என்ன பண்ணுவார்கள்?
விடை: இருவர் பெயரையும் சீட்டுக் குலுக்கிப் போட்டு, அதிர்ஷ்டசாலிக்குக் கேட்ட சின்னம் ஒதுக்கப்படும்.


× ஜெயபாரதி


○ நிலகவதி


× சொக்கலிங்கம்


× கிருஷ்ணமூர்த்தி

11) கேள்வி:-- வட கொரியா, தென்கொரியா இவற்றின் தலைநகரங்கள் என்னென்ன?
விடை: வ. கொரியா — பியாங்யாங் தெ. கொரியா — சியோல்.

12) கேள்வி:- மார் சூபியல்ஸ் என்பதுஎன்ன?
விடை:- தாயின் அடிவயிற்றில் காணப் படும் பையில் குட்டிகளைச் சுமந்து செல் லும் விலங்கினங்களுக்கு மார்சூபியல்ஸ் என்று பெயர்.
(உ—ம்.) கங்காரு என்பது சொல்லாம லேயே தெரிந்திருக்குமே!

13) கேள்வி:- 'ஹாலிவுட்' அமெரிக்காவில் இருப்பது எல்லாருக்கும் தெரியும். அது அமெரிக்காவின் எந்த மாநிலத்தில் இருக்கிறது தெரியுமா?
விடை: கலிஃபோர்னியா மாநிலத்தில்.

14) கேள்வி:- தமிழ்நாட்டில் மொத்தம் எத்தனை மாவட்டங்கள் இருக்கின்றன?
விடை:- பதினாறு.

15) கேள்வி:- ஒலிம்பிக்கில் புகழ் பெற்ற மாரத்தான் ஓட்டப் பந்தயத்தில் ஓட வேண்டிய தூரம் எவ்வளவு?
விடை:- 26 மைல் 385 கெஜம்.

16) கேள்வி:- 'தமிழ்நாடு எக்ஸ்பிரஸ்' எந்தெந்த தினங்களில் சென்னையைவிட்டுப் புறப்படுகிறது?
விடை:- ஞாயிறு, திங்கள், புதன், வெள்ளிக்கிழமைகளில் சென்னையைவிட்டுப் புறப்படும்.

இந்த க்விஸ் முடிந்ததும், பங்கேற்றோர் 4 பேருக்கும் பொதுவாக ஒரு கேள்வி கேட்டு, சரியான விடை சொல்பவருக்கு 'கல்கி' ஒரு போனஸ் பரிசு தரும் என அறிவித்துவிட்டுக் கேட்கப்பட்ட கேள்வி:- சென்னையிலிருந்து கோயமுத்தூர் எவ்வளவு தூரம்?

500 கி. மீ. என்று சொல்லி போனஸ்பரிசு பெற்றவர் கிருஷ்ணமூர்த்தி. (சரியான விடை 498 கி. மீ. — சாலை வழியாக.)

நன்றி:— க்விஸ் நடத்த உதவிய மார்ஷல், உதயகுமார், ரங்கராஜன் மூவருக்கும்.

— தொகுப்பு: எஸ். சந்திரமௌலி
— ப்ரியன்

# பிள்ளையார் சுழி



பிராமணத் தமிழ்க் குடும்பங்களையே சபா மேடை நாடகங்களில் பார்த்துச் சலித்துக் கொண்டிருப்பவர்களுக்கு, ஒரு மாறுதலாக 'பிள்ளையார் சுழி'யை அழுத்த மாகவே போட்டிருக்கிறார் கஜேந்திர குமார். எதைச் சொன்னால் ரசிகர்கள் சிரிப்பார்கள். எந்த நடிகர் எப்படிச் சொன்னால் ரசிப் பார்கள் என்பதை நன்றாகவே அவர் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிறார் என்பதை சபா. வில் அவ்வப்போது எழும் குபீர் சிரிப்புகள் துல்லியமாகக் காட்டுகின்றன.

ஐந்தாவது வரையே படித்த இராமத்துப் பிள்ளையை எஸ். எஸ். எல். ஸி. படித்தவன் என்றும், பி. ஏ. பாஸ் செய்த பட்டணத்துப் பெண்ணை ஐந்தாவதுவரையே படித்தவள் என்றும் இரண்டு குடும்பங்களுக்கும் பொது நண்பரான வக்கில் கைலாசம் பொய் சொல்லிக் கல்யாணம் செய்து வைக்க, இருவருமே தமது படிப்பறிவை வெளிக் காட்டாமல் வேஷம்போடும் வரை நகைச்சுவை தூள் பறக்கிறது. குட்டு ஒருநாள் உடைபட, இருவரும் சபதம் போட்டுக்கொண்டவுடன் சிரிப்புக் கொஞ்சம் குறைந்து சீரியஸ்னஸ் வந்தாலும் அது அளவுக்கு மீறாமலும், உபதேசம் என்ற பெயரில் பொறுமையைச் சோதிக்காமலும் 'நகைச் சுவை நடிகர் சீரியஸ் வசனம் பேசுவதாவது' என்ற கேலிக்கு உள்ளாகாமலும் கச்சிதமாக அமைந்து கைதட்டல் பெற்றுத் தருகிறது கூரான வசனம்.

பொழுதுபோக்கு நாடகம் என்ற முத்திரை இருந்தாலும், யதார்த்தமான நடிப்பை வழங்குவதில் காத்தாடி, மேகலா, எஸ். என். பார்வதி, முத்தண்ணா ராமபத்ரன், பாலாஜி, ரங்கநாதன் யாருமே குறை வைக்கவில்லை. அதிலும் 'காத்தாடி'யின் பக்கம் இப்போது காற்று நன்றாக வீசுகிறது. நாடகத்தின் வெற்றிக்கு வேறு காரணங்களைத் தேடி அலைய வேண்டியதேயில்லை!

-சாருகேசி

# மாலையில் பூக்கும் மலர்கள்

### இரு வாரங்களில்...

டாக்டர் பாலாஜி நடுத்தர வயதைக் கடந்து விட்டிருந்தாலும் இளமையும் அழகும் மாறாத சுந்தர புருஷன். சொந்தத்தில் நர்ஸிங் ஹோம் நடத்தி வருகிறார். சஸ்திர சிகிச்சை நிபுணர். அவருடைய வனப்பு மிக்க மனைவி கௌரி சிறந்த இல்லத்தரசியாக விளங்குவதுடன் நர்ஸிங் ஹோம் நிர்வாகத்தையும் மேற்கொண்டு மேற்பார்வையிட்டு கணவனுக்கு உதவி வருகிறாள். ஒருவரை ஒருவர் மிகவும் நேசிக்கும் இந்த ஆதர்ச தம்பதி செல்லமாக வளர்க்கும் நாய் விக்ரம். அன்புக்கும் கண்டிப்புக்கும் கட்டுப்பட்டுக் குடும்பத்தில் ஓர் அங்கமாக வளர்ந்து வருகிறது. நர்ஸிங்ஹோமில் ஆபரேஷன்களைக் கவனிக்க பாலாஜி சென்றதும் தோட்டம், காண்மன், டிஸ்பென்ஸரி முதலியவற்றை மேற்பார்வையிட்டு வரும் கௌரி, டெலிஃபோன் ஆபரேட்டர் அருகே வந்து சில மருந்துகளுக்கு ஆர்டர் கொடுக்க ஃபோன் செய்ய முற்படும் போது வயிற்றில் சுண்டி இழுக்கிற வேதனையை உணர்கிறாள். மேஜையைத் தாங்குதலாகப் பற்றிக் கொண்டு வலியை மறைக்கவும் சமாளிக்கவும் முயல்கிறாள்.....

## 3

அது 1963ம் வருஷம்.

அக்டோபர் மாசத்தின் ஒரு சுகமான மாலைப் பொழுது.

ஸ்கூட்டரைப் போர்ட்டிகோவில் நிறுத்தி, ஸ்டாண்ட் போட்டுவிட்டுப் படி ஏறியவனைச் சாம்பசிவம் ஆர்வத்துடன் வரவேற்றார்.

''வாங்க டாக்டர்... வீடு தேடறது கஷ்டமா இல்லியே!''

''குட் ஈவ்னிங் ஸார்... நீங்க வழி சொன்னதை வைச்சிக்கிட்டு நேரா வந்திட்டேன். சிரமப்படலே....''

சிவசங்கரி



''ப்ளீஸ் கம் இன்... உட்காருங்க...அ.... ஷூவை அவிழ்க்கத் தேவையில்லே.... அப்படியே சௌகரியமா உட்காருங்க..., கௌரி.....''

தலையைத் திருப்பிக் குரல் கொடுத்தவர் அருகில் நின்ற வேலையாளிடம் ''சின்னம்மாவை நான் கூப்பிட்டேன்னு சொல்லுப்பா'' என, அவன் உள்ளே போனான்.

இரண்டு நிமிஷங்களில் கௌரி வந்தாள்.

அதுதான் பாலாஜிக்கும், கௌரிக்கும் இடையில் தோன்றிய அருமையான பந்தத்துக்குப் பிள்ளையார் சுழி போட்ட சந்திப்பு.

''கூப்பிட்டீங்களாப்பா?''

''எஸ். இப்படி வந்து உட்காரு. லார் யாரு தெரிகிறதா? டாக்டர் பாலாஜி... அடிக்கடி சொல்றேனே, அவர்தான்...வீட்டிற்கு ஒரு நாள்அவசியம் வாங்கன்னு விடாம நச்சரிச்சிறது தாங்காம, இன்னிக்கு வந்திட்டார்....''

ஜோக் அடித்துவிட்ட குஷியுடன் சாம்பசிவம் குலுங்கிச் சிரிக்க, கௌரி மரியாதையுடன் புன்னகைத்து ''ஹலோ'' என்றாள்.

''இதான் டாக்டர் மை ஒன்லி டாட்டர் கௌரி... பி.எஸ்ஸி. ஹோம் சயன்ஸ் முடிச்சி இரண்டு வருஷம் ஆச்சு... டயட்டீஷியன் கோர்ஸ் பண்ணிட்டு, வி.எச். எஸ். ஹாஸ்பிட்டல்ல பார்ட் டைம் வேலை பார்க்கறா... படிப்புலதான் கெட்டிக்காரின்னு இல்லே...பாடுவா...பெயிண்டிங் அருமையா செய்வா.... அப்புறம்....''

''அப்பா எனக்கு இடியாப்பம் ரொம்பப் பிடிக்கும்,பாகற்காய் பிடிக்காதுன்னு சொல்ல மறந்துட்டீங்களே!''

சில கணங்களுக்குக் குழம்பி, பின் மகள் வாழைப் பழத்தில் ஊசி ஏற்றுவது புரிய, தொடையில் தட்டிக் கொண்டு சாம்பசிவம் பெரிசாய்ச் சிரித்தார்.

''பார்த்தீங்களா டாக்டர்... என்னமா என்னைக் கேலி பண்றா! என் பெண் எனக்கு உசத்தி; பெருமையா பேசிக்கிறதுல என்ன தப்பு? ம்? நீ என்ன வேணா சொல்லிக்க கௌரி... சொச்சத்தையும் சொல்லிட்டுத் தான் நிறுத்தப் போறேன். அப்புறம் டாக்டர்... காலேஜ்ல சௌரி கோல்ட் மெடலிஸ்ட்...''

''ஐயோ கடவுளே!'' குறும்புடன் தலையில் கை வைத்து.

—''அப்பா நீங்க இப்ப நிறுத்தலேன்னு, சரியா எண்ணி இரண்டு நிமிஷத்துலே டாக்டர் 'எமர்ஜன்ஸி ஆபரேஷன் இருக்கு— இப்பத்தான் ஞாபகம் வந்துச்சு'ன்னு ஓடப் போறார் பாருங்க...'' என்றதும் அப்பா-பெண் நடுவில் வளர்ந்திருக்கும் ஆரோக்கியமான நட்பை உணர்ந்து, பாலாஜி சந்தோஷத்துடன் சிரித்தான்.

''எனக்கு ஒரு அவசர வேலையும் கிடையாது. நீங்க சொல்லுங்க சார்...''

''போச்சுடா...''

கௌரி உதட்டைப் பிதுக்கி —தோளைக் குலுக்க, சாம்பசிவம் தொடையைத் தட்டிக் கொண்டு மீண்டும் உரக்கச் சிரித்தார்.

''தாங்க்யூ டாக்டர்... என்ன இருந்தாலும் ஒரு ஆம்பிளையின் கால் ஒரு ஆம்பிளைக்குத்தான் ஐ மீன் பாம்பின் கால்....''

கௌரி எழுந்து நின்றாள்.

''நிம்மதியா யாரோட காலை வேணா ஆராய்ச்சி பண்ணுங்க... நான் போறேன்.''

சிரிப்பு மாறாத குரலில் பேசிவிட்டு அவள் போனதும் சாம்பசிவம் சட்டென்று தீவிரமாகப் பெருமூச்சு விட்டார்.

''இவ இத்தனை அருமை பெருமையா இருக்கறதைப் பார்க்க இவ அம்மா இல்லேங்கறதைத் தவிர எனக்குச் சத்தியமா வேற குறை எதுவும் இல்லே டாக்டர்... அஞ்சு வருஷமாச்சு என் வொய்ஃப் போயி... எல்லாத்துக்கும் ஆசைப்பட்டா எப்படி... ம்?''

''ஐம் ஸாரி ஸார்—''

மனைவியைப் பற்றிய நினைவுகளில் சிக்கிக் கொண்டுவிட்ட மாதிரி, சாம்பசிவம் சோபாவில் சாய்ந்து கொள்ள, அவரைக் கலைக்க விரும்பாமல் பாலாஜி மேஜையில் கிடந்த பத்திரிகையை எடுத்துப் புரட்டினான்.

எம். பி. பி. எஸ்., எம். எஸ். ஐ. இருபத்தி ஐந்தாவது வயதுக்குள் முடித்து விட்டு எஃப். ஆர். ஸி. எஸ். படிக்கவென, முதலில் எடின்பரோவுக்குச் சென்று, இரண்டு வருஷங்களில் அந்தப் பட்டத்தைச் சுமந்த கையோடு லண்டன் பட்டத்துக்கு மதிப்பு அதிகம் என்று, அங்கேயும் ஒரு வருஷம் படித்து, அந்தப் பட்டத்தையும் பெற்று, தாய்நாடு திரும்பி, பூந்தமல்லி நெடுஞ்சாலையில் உள்ள சத்யா பாலிக்ளினிக்குள் சர்ஜனாக பாலாஜி சேர்ந்து இரண்டு மாசங்களே ஆன சமயம் அது....

எல்லோரும் லாட்டரி டிக்கெட்டில் பரிசு கிடைக்கவில்லை யென்றால் அவற்றைக் கிழித்தெறிவார்கள். ஆனால் குளச்சலில் உள்ள 'மாஸ்டர் சலூன்' உரிமையாளர் சமுத்திரம் தாம் வாங்கிய லாட்டரி டிக்கட்டுகளை எல்லாம் தோரணமாகக் கட்டி, தமது கடையினுள் தொங்க விட்டிருக்கிறார். சுமார் 500 ரூபாய் மதிப்புள்ள பல மாநில டிக்கட்டுகளைத் தோரணமாகக் கட்டித் தொங்க விட்டிருப்பது பார்ப்பதற்கு நன்றாகத்தான் இருக்கிறது. ''ஏன் இப்படித் தோரணம் கட்டி யிருக்கிறீர்கள்?'' என்று கேட்டபோது, லாட்டரிச் சீட்டின் மூலம் நான் எவ்வளவு பணத்தை இழந்திருக்கிறேன் என்பது எல்லாருக்கும் தெரிய வேண்டுமல்லவா! அதற்காகத்தான்!'' என்றார்.

தகவல்: பானு மணாளன்





விகோ மெட்டி என்ற மாணவன் பொழுது போகாததனல் நூலகம் சென்ருன். ரொம்பப் பழைய புத்தகம் ஒன்றைப் பொறுக்கி எடுத்தான். அது ஹீரோ என்ற தத்துவ ஞானி எழுதிய நூல். மேலே படிந்திருந்த தூசியைத் தட்டிவிட்டுப் புத்தகத்தைப் பிரித்தான். கீழே ஒரு பழுப்புக் காகிதம் விழுந்தது. எடுத்துப் படித்தான். அது ஓர் உயில்!

அந்தப் புத்தகத்தை எழுதிய ஹீரோ தம் சொத்தான 50,000 பவுனும் அப் புத்தகப் பிரதியை யார் முதலில் பிரித்துப் படிக்கிருர்களோ, அவர்களுக்கே சேர வேண்டும் என்று எழுதி வைத்திருந்தார்! புத்தகப் பிரதி அந்த நூலகத்துக்கு வந்து 170 ஆண்டுகள் ஆகியும் எவரும் அதைத் தொடவே இல்லை. விகோ மெட்டிக்குத்தான் அடித்தது அதிர்ஷ்டம்!

ஆதாரம்: சாகித்ய சங்கம்

—கிருஷ்ண சங்கர்

சத்யா பாலி க்ளினிக்கின் உரிமையாளர் டாக்டர் சுந்தரம், சாம்பசிவத்தின் நண்பர் மட்டுமில்லே, குடும்ப டாக்டரும் கூட.

ரத்த அழுத்தம் அதிகம் என்ற காரணத்தால், பிபி.ஐ. பார்த்துக்கொள்ளும் சாக்கில் நண்பரோடு அரட்டை அடிக்கவும் சாம்பசிவம் கிளினிக்குக்கு அடிக்கடி வருவதுண்டு.

அப்படிச் சென்ற மாசம் வந்தபோது உயரமாய், மாநிறமாய், சுறுசுறுப்பாய், சிரிக்கும்போது பளிச்சிடும் வெள்ளைப் பற்களுமாய், இழைய வாரிவிடப்பட்ட தலே முடியும் மழமழவென்று ஷேவ் செய்யப்பட்ட முகமுமாய்ச் சுந்தரத்தின் அறைக்கு வந்து, முதல் நாள் செய்த ஆபரேஷன் பற்றிப் பேசின பாலாஜியைச் சந்தித்தார்.

யாரிது, புதுசாய்? — என்ற கேள்வியுடன் சாம்பசிவம் உட்கார்ந்திருக்க;

''நம்ப ஹாஸ்பிடலில் 'புதுசா சேர்ந்திருக்கிற டாக்டரை நீ மீட் பண்ணலியே சாம்பசிவம்? இவர்தான் டாக்டர் பாலாஜி; இஸ் ஈஸ் மை பெஸ்ட் ஃப்ரெண்ட் சாம்பசிவம்.....''

''ஹலோ ஸார்...''

''ஹலோ டாக்டர்....''

''பாலாஜி ஈஸ் வெரி வெல் க்வாலிஃபைட். எம். பி. பி.எஸ்.ல என் ஸ்டூடன்ட். அப்பவே ரொம்ப ப்ரிலியண்ட்னு நாங்கல்லாம் பேசிப்போம். எப். ஆர். ஸி. எஸ். பண்ணிட்டுப் போன மாசம் இண்டியாவுக்கு வந்தவனே, சாமர்த்தியமா நம்ப க்ளினிக்குல வலேச்சுப் போட்டுட்டேன்...''

பார்க்கப் பார்க்க, அவனேடு பேசப் பேச ஆளே ரொம்பவும் பிடித்துப் போக, க்ளினிக்குக்குச் செல்லும்போதெல்லாம் 'எங்கப்பா உன் சர்ஜன்?' என்று சாம்பசிவம் கேட்க முற்பட்டார்.

அப்புறம் வீட்டுக்கு வாப்பா என்று பாலாஜியை அழைக்க ஆரம்பித்தார்.

**கா**ப்பி...''

பத்திரிகையிலிருந்து பாலாஜி கண்களே நிமிர்த்தினன்.

கௌரி, கையில் மிக்ஸர், ஸாண்ட்விச், கேக் அடங்கின பலகாரத் தட்டு, கூட நின்ற வேலேக்காரனிடம் தண்ணீர், காப்பி கொண்ட ட்ரே....

''உங்களேப் பத்திரிகை பார்க்க விட்டுட்டு அப்பா தூங்கிப் போயிட்டாரா? உட்கார்ந்துகிட்டே பூனத் தூக்கம் தூங்கறதுல அப்பா எக்ஸ்பர்ட்...''

டிபன் தட்டுக்களேக் கையில் எடுத்த சாம்பசிவம் ''அ... சொல்ல மறந்திட்டேனே— கௌரி சமையல் பிரமாதமாச் செய்வா... இந்த கேக்ஸ் எல்லாம் அவ பண்ண....''

''அப்பா... ப்ளீஸ்... என்னே விட்டுடுங்களேன்....''

''சரி... சரி... உன்னேப் பத்தி வேணும். டாக்டரைப் பத்திப் பேசலாம் இல்லியா? பாலாஜி எம். எஸ். ல. கோல்ட் மெடலிஸ்ட். வயிறு சம்பந்தப்பட்ட ஆபரேஷன்ல புலினு லண்டன்ல சர்ட்டிபிகேட் வாங்கியிருக்கார். வயசுல சின்னவரா இருக்கார்னு நினைக்காதே. கத்தியக் கையிலே எடுத்தா வேலே கன கச்சிதமா இருக்குமாம். 'அழகான கோலத்தைப் பார்க்கற மாதிரி ரசிச்சுக்கிட்டே இருக்கலாம்'னு சுந்தரம் சொல்வார்...''

சின்னக் கனேப்புடன் பாலாஜி குறுக்கிட்டான்.

''எனக்கும் இடியாப்பம் பிடிக்கும், பாகற்காய் பிடிக்காது... அதையும் லிஸ்டுல சேத்துக்குங்க ஸார்...''

ஒரு கணம் கண்களே விரித்த அதிசயத்துடன் அவனே ஏறிட்ட கௌரி சட்டென்று வாய் விட்டுச் சிரித்து, ''ஐயோ... அப்பா... சரியா மாட்டிக்கிட்டீங்க...''என்று கூற, அந்தச் சிரிப்பில் உற்சாகத்துடன் சாம்பசிவமும் கலந்துகொண்டார்.

அன்றைக்குப் பாலாஜிபுறப்படு முன் கூடத்தில் மாட்டியிருந்த ஓர் ஓவியத்திடம் சென்று, ஊன்றிப் பார்த்து அடியில் கௌரி என்கிற எழுத்துக்கள் காணப்பட, ''நீங்க பெயின்ட் செய்ததா?''என்ருன் அருகில் நின்றவளிடம்.

''ம்ம்...''

''நீங்க யார் கிட்டயாவது முறையா பயிற்சி எடுத்துக்கிட்டீங்களா?''

''ம்ஹூம்.''

''கௌரி ஈஸ் எ செல்ஃப் மேட் ஆர்டிஸ்ட் பாலாஜி....''

''அப்ப, உங்க மானசீக குருவா வின்சென்ட் வென் காக்ஐ நினைச்சிருக்கீங்களா?''

கௌரி கண்களே இடுக்கிக் கொண்டு அவனேப் பார்த்தாள்.

''எதுனலே அப்படிக் கேக்கறீங்க?''

''ப்ரஷை உபயோகப்படுத்தி யிருக்கிற முறையிலேருந்து — அவருக்குனு ஒரு தனி ஸ்ட்ரோக் உண்டு. அடிப்படை நிறங்கல்ல சின்னச் சின்ன நடுக்கமான நீட்டல்களால், ஒ வித வைப்ரேஷனே அவரோட ஓவியங்கள் கொடுக்கும்னு சொல்வாங்க... உங்கள்துலே யும் அந்த ஸ்ட்ரோக் இருக்கிற மாதிரி பட்டுது.... முக்கியமா இந்த பெயிண்டிங்க பார்க்கறபோது எனக்கு வேன் காக்கோட 'ஸ்டாரி நைட்' ஞாபகத்துக்கு வர்றது...''

கௌரி சின்னப் பெண் போலக்கைகளைத் தட்டி 'க்ரேட்' என்றாள். தகப்பனார் பக்கம் திரும்பி ''இவர் சொல்றது அத்தனையும் சரிப்பா.... நான் 'ஸ்டாரி நைட்'ஐ மனசில வெச்சுக்கிட்டுத்தான் இதைத் தீட்டினேன்'' என்றாள்.

''நீங்களும் பெயிண்ட் பண்ணுவீங்களா டாக்டர்?''

''ஓ—நோ....''

''அப்புறம் எப்படி?''

''லண்டன்ல இருக்கறப்போ ம்யூஸியம். அங்க இங்க போய் வளர்த்துக்கிட்ட ஞானம். தட்ஸ் ஆல்...''

ரொம்ப அடக்கமாக பாலாஜி பேசியதை நம்பி அதோடு விட்டு விட்டாலும் அப்பாவின் வற்புறுத்தலுக்காக, வீட்டிலேயே ஒரு விருந்துக்கு ஏற்பாடு பண்ணி, தான் வரைந்த ஓவியங்களைச் சிறு சன்காட்சியாக அமைத்து நெருங்கின நண்பர்களை முக்கியமாய் ஓவியத்தில் ஈடுபாடு உள்ளவர்களை அழைக்க, பாலாஜியும் வேஷ்டி, ஜிப்பாவுடன் வந்து சாதுவாக ஓவியங்களைப் பார்த்து, விருந்தை உண்டுவிட்டுப் போன மூன்றும் நாள் காலை எக்ஸ்பிரஸில் கௌரிக்கு ஓர் இனிய அதிர்ச்சி காத்திருந்தது.

அவளுடைய ஓவியம் ஒன்று பிரகரமான தோடு அரை பத்தி விமர்சனமும்..''1853 முதல் 1890 வரை வாழ்ந்த டச் ஓவியர் வேன் காகைத் தனக்குப்பிடித்தமான ஓவியர் என்று கூறும் கௌரி, அவருடைய பாதிப்பு தன் ஓவியங்களில் காணப்படுவதைப் பெருமையாகக் கருதுகிறார். 'புயல்' 'பறவைகள்' போன்ற ஓவியங்களில் அவர் கொடுத்திருக்கும் ப்ரஷ் ஸ்ட்ரோக்ஸூம், தேர்ந்தெடுத்திருக்கும் வண்ணங்களும் காற்றின் வேகமும் பறவைகளின் அசைவுகளும் நிஜம் போன்ற பிரமையை உண்டாக்குகின்றன...''

அவசரமாய் அடியில்விமர்சகரின்பெயரைப் பார்த்தாள்.

பாலர்....

அவ்வப்போது ஓவிய, இதர கலை சம்பந்தப்பட்ட விமர்சனங்களை எழுதும் பாலா...

இவர் எப்போது என் ஓவியங்களைப் பார்த்தார்? அதுவும், வேன் காகின் பாதிப்பைப் பற்றி அழுத்தமாகக் குறிப்....

திடுமென கௌரிக்குஅன்றுபாலாஜி பேசிய பேச்சுக்கள் நினைவுக்கு வந்தன.

அவரா?

அவர் தானா?

சரியாக இருபதாம் நிமிஷம் கௌரி சத்யா கிளினிக்கில் இருந்தாள்.

''டாக்டர் பாலாஜி தியேட்டர்ல இருக்கார் மேடம்... வர ரொம்ப நேரம் ஆகுமே.''

''பரவாயில்லே...நான்வெயிட்பண்றேன்''

பதினொரு மணிக்கு பாலாஜி தன் அறைக்குள் நுழைந்தபோது, கௌரி காத்திருந்தாள்.

''ஹலோ! வாட் எ ப்ளெஸன்ட் ஸர்ப்ரைஸ்!''

''எனக்கும்தான் டாக்டர்''—

''என்ன சொல்றீங்க?''

கௌரி பேப்பரை அவன் முன் நீட்டினாள்.

''ஓ!.... அதுவா....''

பதினெட்டு வயசுப் பையன் போல பாலாஜி வெட்கத்துடன் சிரிக்கத்,

''நீங்கதான் கிரிட்டிக் பாலானு என் கிட்ட ஏன் சொல்லல்ல, டாக்டர்;''

''சொல்லிக்கிற மாதிரி அவ்வளவு பெரிய ஆள்னு நினைக்காததாலதான்....''

''எப். ஆர். ஸி. எஸ். படிச்ச டாக்டர் ஒரு கலை விமர்சகரா இருப்பார்னு நான் கனவுலேயும் நினைக்கல...''

பாலாஜி பதில் சொல்லாமல் சிரித்தான்.

பின், ''எனக்குப் பசிக்கிறது; காலேந்து டிபன் கூடச் சாப்பிடாம தியேட்டர்ல இருந்துட்டு வரேன்... ஹவ் அபௌட் லஞ்ச்?''—என,

அந்த மாசம் முடிவதற்குள் அவர்களின் திருமணம் சுற்றும், உற்றும் வாழ்த்த அமர்க்களமாய் நடந்தேறியது.

(தொடரும்)

## அன்றும் இன்றும்!

தாங்குவதிலும் சரி, தாக்குவதிலும் சரி, நமக்கு நிகர் நாமேதான்! ஒரு காலத்தில் கிரிக்கெட் வீரர் குண்டப்பா விஸ்வநாத்தின் புகழ் பாடாதவர்களே இல்லை எனலாம். ஆனால் இன்று?... அவரைச் சீண்டுவாரில்லை. அவர் கேவலமாக நடத்தப்படும் நிலைதான் மேலும் வருந்தத் தக்கது.

இந்தியக் கிரிக்கெட் வீரர்கள் ப்ருடென்ஷியல் கப்பை வென்று தாயகம் திரும்பிய. அன்று, பம்பாய் விமான நிலையத்தில் விஸ்வநாத்தைக் கவனிப்பாரில்லை. விமானத்திலிருந்து இறங்கியதும் தமது உடைமைகளைத் தாமே தள்ளிக்கொண்டு வரும் அவரது நிலையை வங்காள நாளிதழ் ''ஆஜ்கார்'' படம் பிடித்துள்ளது. அவர் தள்ளி வந்த டிராலிமீது ஏறிக்கொண்டு வேடிக்கை பார்த்தார்களாம் ரசிகப் பெருமக்கள்!

—கல்கத்தா நாகராஜன்



# டு-இன்-ஒன்



போர்ஹென்ஸ்
டபிள்—ஆக்ஷன்
டூத்ப்ரஷ் உங்கள்
பற்களை சுத்தம்
செய்யும்போதே
ஈறுகளையும்
தேய்த்துக்
கொடுக்கிறது.

பற்களை சுத்தம்
செய்யும்
உறுதியான
நீலக் குச்சங்கள்

ஈறுகளைத்
தேய்த்துக்
கொடுக்கும்
மென்மையான
வெள்ளைக்
குச்சங்கள்

**போர்ஹென்ஸ்**
டு-இன்-ஒன்
டூத்ப்ரஷ்

அடல்ட்
மற்றும் ஜூனியர்

277 F-203 TAM

# அழகாய் இருப்பது ரொம்பவும் தப்பு!

ராஜேஷ்குமார்

பெண் பார்க்கும் படலத்தின் கடைசிக் கட்டம்.

சமையலறை ஜன்னல் கதவை மூணே முக்கால் பங்கு சாத்திவிட்டுமிச்சம் இருந்த அரை சென்டி மீட்டர் இடைவெளியில் மாப்பிள்ளைப் பையனைப் பார்த்துக் கொண்டிருந்தோம்நானும் என் அக்கா ஜானகியும். பெண் பார்க்க வந்திருப்பது அவளைத்தான்.

''அக்கா! மாப்பிள்ளை எப்படி?'' நான் அவளுடைய தோளைத் தட்டி விட்டுக்கண்ணைச் சிமிட்டி சிரித்தேன்.

''போடி!'' என்றாள் அக்கா வெட்கமாய்.

நான் அவளுடைய இடுப்பில் இடித்தேன். ''ஆள் எல்லாம் அழகாய்த்தான் இருக்கார். ஆனா தலைதான் சீக்கிரமா வழுக்கையாயிடும் போலிருக்கு! ரெண்டு பேருக்கு இருக்க வேண்டிய மூக்கோட நீளம் இவர்கிட்டயே இருக்கு. பார்வையைப் பார்த்தியாக்கா? நம்மசமையலறை ஜன்னல் மேலேயே இருக்கு. சும்மா சொல்லக்கூடாது. வரப்போற பெண்டாட்டியை நல்லாவே மோப்பம்பிடிக்கிறார்.''

ஜானகி செல்லமாய்ச் சீறினாள். ''ஏண்டி மாயா! நீ வாயை வெச்சுக்கிட்டுச் சும்மா இருக்க மாட்டியா? இப்படி வாயடிக்கிறதை விட்டுட்டு அம்மாவுக்கு கூட மாட உதவி பண்ணு... ம்... போ!... அம்மாவைப் பார்த்தியா? சாப்பிட்ட தட்டு பூராத்தையும் அவ ஒருத்தியாவே எடுத்துட்டு வரச் சிரமப்பட்டிருக்கா...!''

அக்கா என்னைப்பிடித்துத் தள்ளச் சமையலறையை விட்டு வெளியே வந்து அம்மாவுக்கு



உதவியாய்ச் சாப்பிட்ட தட்டுக்களை எடுக்க ஆரம்பித்தேன். மாப்பிள்ளை வீட்டுக்காரர்களில் யாரோ ஒருத்தர் அப்பாவிடம் கேட்டுக் கொண்டிருந்தார்.

''இதுதான் உங்க ரெண்டாவது பொண்ணு?''

''ஆமாங்க.''

''பேரு?''

''மாயா.''

''படிக்குதா?''

''உம்... நிர்மலா காலேஜிலே பி.எஸ்ஸி. ரெண்டாவது வருஷம் படிக்கிறா. எங்க தலைமுறையிலே இவ ஒருத்திதான் பட்டம் வாங்கப் போறா!'' அப்பா பெருமையாய்ச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே நான் தட்டுக்களை எடுத்துக் கொண்டு உள்ளே வந்து விட்டேன். அக்கா இன்னமும் ஜன்னல் அருகேயே நின்றிருந்தாள்.



கல்யாணத் தரகர் வெற்றிலைச் செப்பேறிய வாயோடு பேச ஆரம்பித்தார். ''பொண்ணு புடிச்சிருந்தா மத்த விஷயங்களைப் பத்திப் பேச ஆரம்பிச்சுடலாமே! என்ன பிள்ளைவாள்...?''

மாப்பிள்ளைக்கு அப்பா தொண்டையைச் செருமிக் கொண்டு என் அப்பாவை ஏறிட்டார். ''பொண்ணு எங்க எல்லாருக்கும் பிடிச்சிருக்கு....!''

அப்பாவும், அம்மாவும், நானும் அக்காவும் முகம் மலர்ந்த அதே வினாடி மாப்பிள்ளைக்கு அப்பா தொடர்ந்தார்: ''ஆனால் உங்க மூத்த பொண்ணையல்ல....''

''பின்னே?'' — அப்பா கேட்க...

''உங்க ரெண்டாவது பொண்ணு மாயா!'' அவர் சொல்ல—

எல்லாரும் அதிர்ந்தோம்.

அப்பா முகம் சிவந்து, தோளில் போட்டிருந்த துண்டைக் கையில் எடுத்துக்கொண்டார். —கோபத்தில் வார்த்தைகள் கோர்வையில்லாமல் வந்தன.

''நீங்க இப்படிச் சொல்றது சரியில்லே.''

''நாங்க சரியாத்தான் சொல்றோம். எம் பையனோட நிறத்தைப் பார்த்தீங்களா...? சரியான சிவப்பு. உங்க பெரிய பொண்ணோட நிறம் மாநிறத்துக்கும் கீழே... பௌடர் போடாட்டிக் கறுப்புன்னு கூடச் சொல்லலாம். ஆனா உங்க ரெண்டாவது பொண்ணு நல்ல நிறம்... லட்சணமா இருக்கா... கல்யாணத்தை இவங்களுக்கு முடிச்சா அது பொருத்தமாயும் இருக்கும்...''

அப்பா எழுந்தார்.

வாசலை நோக்கிக் கையைக் காட்டி அமைதியான குரலில் சொன்னார். ''ஒரு நிமிஷம் தர்றேன்... அதுக்குள்ளே எல்லாரும் வாசலுக்குப் போயிருங்க!''

தரகர் பதறிப்போய் அப்பாவின் கையைப் பற்றினார். ''நமச்சிவாயம்! என்ன பேச்சுப் பேசறீங்க? பெண் பார்க்க வர்ற இடத்திலே இது மாதிரி நடக்கிறதெல்லாம் சகஜம்... நாமதான் கொஞ்சம் அனுசரிச்சுட்டுப் போகணும்....''

அப்பா வெடித்தார். ''எப்படிய்யா அனுசரிச்சுட்டுப் போறது? அவங்க வீட்ல ரெண்டு பொண்ணுங்க இருந்து... எம்பையனுக்கு நான் பொண் கேட்கப் போயி இப்படிப் பேசியிருந்தா இவங்க ஒத்துக்குவாங்களா?''

மாப்பிள்ளை வீட்டுக் கும்பல் முழுதும் கசமுசாவென்று எழுந்தது. மாப்பிள்ளைக்கு அப்பாவும் கோபமாய்ப் பேச ஆரம்பித்தார். ''கல்யாணம்னு சும்மாவா? படிச்ச பொண்ணைக் குடுங்கன்னு கேட்கிறதுல என்ன தப்பு? நீங்க இவ்வளவு பேசின பின்னாடி ரெண்டாவது பொண்ணைக் கொடுத்தாலும் எங்களுக்கு வேண்டாம்....! ஊர்ல உலகத்தில பொண்ணா இல்லே...? அவனவன் ஆயிரமாயிரமா பணத்தைக் கூறுவெச்சுக் கிட்டுப் பொண்ணைக் குடுக்கக் காத்திட்டிருக்கான்!''

''அங்கேயே போங்க.... அந்த வீட்டுக்குப் போனாலும் அங்கே யிருக்கிற எல்லாப் பொண்களையும் வரிசையா நிக்க வச்சு, ஒருத்தியைச் செலக்ட் பண்ணிட்டு அப்புறமா பெண் பார்க்கற வைபவத்தை நடத்துங்க!''

அப்பா ஆவேசமாய்க் கத்தக் கத்த...

மாப்பிள்ளை வீட்டைச் சேர்ந்தவர்கள் வேக வேகமாய் வெளியேறிக் கொண்டிருந்தார்கள். நிமிஷ நேரம் வீடு வெறிச்சோடிவிட்டது. தரகர் மட்டும் உட்கார்ந்திருந்தார்.

''நமச்சிவாயம்! நீங்க இவ்வளவு பதற்றமாய்ப் பேசியிருக்கக் கூடாது. உங்க ரெண்டாவது பொண்ணை அவங்க கண்ணுல பட விட்டதே தப்பு! மூத்தவளைக் காட்டிலும் சின்னவ லட்சணமாயும், நிறமாயும் இருந்துட்டா பெரும்பாலான வீடுகள்ல மூத்தவளைப் பெண் பார்க்க வர்றப்ப சின்னவளை வேற எங்கேயாவது அனுப்பிச்சிடுவாங்க. நீங்களும் அதைச் செஞ்சிருக்கலாம்...''

''மூத்தவளைப் பெண் பார்க்க வர்றப்போ சின்னவளை எங்கே அனுப்பலாம் சொல்லுங்க? இன்னிக்கு அவங்க பார்வையிலிருந்து மறைச்சுடறோம் சரி...! மாப்பிள்ளைக்கு முதல் பெண்ணையும் கட்டி வெச்சுடறோம். சரி... அதுக்கப்புறம் மாப்பிள்ளையோட பார்வையில சின்னப் பொண்ணு படாமலா போயிடுவா? அப்ப மட்டும் மாப்பிள்ளைக்குச் சபலம் தட்டாதா? அப்பேர்ப்பட்ட சபல புத்தி இருக்கிற எந்த மாப்பிள்ளையும் எனக்கு வேண்டாம். எம் மூத்த பொண்ணு ஜானகியைப் பார்க்க வர்றவங்க வரட்டும். மாயாவையும் அவங்க கண்ணுல பட வைப்போம். மாயாவையும் பார்த்த பின்னாடி எவன் ஒருத்தன் ஜானகியைப் பிடிச்சிருக்குன்னு சொல்றானோ அவன்தான் எனக்கு மாப்பிள்ளை. அப்பேர்ப்பட்டவன் வர்ற வரைக்கும் என் மகளும் காத்திட்டிருப்பா. நாங்களும் காத்திட்டிருப்போம்.''

அப்பா பேசப் பேச ஜானகி அழ ஆரம்பித்தாள்.

என் கண்களிலும் நீர் கசுகசுவென்றது.

அப்பா நினைத்த மாதிரி எந்த மாப்பிள்ளையும் சுலபமாய் வந்துவிடவில்லை.

வருகிறவனெல்லாம் என்னைத்தான் கேட்டான். சிலர் நேரடியாக் கேட்டார்கள். சிலர் ஊருக்குப் போனதும் கடிதம் எழுதிக் கேட்டார்கள். அப்பா கோபம் கோபமாய்த் துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு ஆத்திரம் தீருகிற வரை கத்தினார்.

''பார்க்கலாம்...இன்னும் எத்தனைபேர்டா வருவீங்க... வாங்கடா... தோலோட நிறத்தைப் பார்க்காம.. அழகை ஒரு பிரமாதமா நினைக்காம... எவனாவது ஒருத்தன் வராமலா போயிருவான்? நீ அழாதேம்மா ஜானகி!''

ஒவ்வொரு தட்வையும் ஜானகியைப்பெண் பார்க்க வருகிறபோது நான்தான் ரொம்பவும் அவஸ்தைப் பட்டேன். நானும் அக்காவைப் போல நிறம் கம்மியாய், கொஞ்சம் அழகு குறைச்சலாக இருந்திருக்கக் கூடாதா என்ற எண்ணம் ஏக்கமாய் மனசுக்குள் படிய ஆரம்பித்தது. என்னதான் அலங்காரத்தைக் குறைத்துக் கொண்டாலும், ஏனோ தானோவென்று ஒரு பழைய புடவையைக் கட்டிக் கொண்டாலும் வருகிற மாப்பிள்ளை என்னைத்தான் கூர்மையாய்ப் பார்த்தான். நான் சமையல் கட்டுக்குள் ஓடி ஒளிந்தாலும் அப்பா என்னை வலியக் கூப்பிட்டு மாப்பிள்ளை வீட்டுக்காரர்களுக்கு வீம்போடு அறிமுகம் செய்து வைத்தார். வந்தவர்கள் சும்மா இருப்பார்களா? என்னையும் அக்காவையும் எடை போட்டுப் பார்த்து முடிவில் என்னை நோக்கிக் கையை நீட்டுவார்கள்.

கெமிஸ்ட்ரி லேப். காலை நேரம். மனசில் வீட்டைப் பற்றின உளைச்சல்.

ஒரு சோதனைக் குழாயில் அடர் நைட்ரிக் அமிலத்தையும் சோடிய உப்பு ஒன்றையும் எடுத்துக்கொண்டு புன்சன் பர்னரில் காய்ச்சிக் கொண்டிருந்தேன். பர்னரின் நீல நிற ஜ்வாலை அமிலத்தைக் கொதிக்க வைக்க ஆரம்பித்தது. மனசில் ஜானகி மையம்கொண்டிருந்தாள்.

அந்தச் சமயத்தில்தான் எனக்கு எதிர் மேஜையில் பொட்டாசியம் பர்மாங்கனேட்டின் எஸ்டிமேஷனைப் பார்த்துக் கொண்டிருந்த லீலா கேட்டாள்.

''ஏ. மாயா... இன்னிக்கு நூன் ஷோ போலாமா?''

''எந்தத் தியேட்டர்?'' — ஏறிட்டேன்.

''பல்லவி.''

''நான் படம் பார்த்தாச்சு லீலா?''

''காந்தி பார்த்துட்டியா?''

''இல்லே...''

''போலாமா?''

''டிக்கட் நீதான் எடுக்கணும்... என்னோட பர்ஸ் சஹாரா பாலைவனம்...''

''ஓ.கே... ஐ அக்ரி'' — கட்டை விரலை வளைத்தாள் லீலா.

அதே விநாடி.... டப்பென்று ஒரு சத்தம்.

# இறுதியில் பெற்றீர் உறுதி



# பிலிப்ஸ் கேஸட் ரெக்கார்டர்கள்

## பணத்திற்கேற்ற மதிப்பு.

## அத்துடன் பிலிப்ஸ் உத்தரவாதம்

உலகத்தரமான இயக்கத்திற்கு உத்தரவாதமும், பிலிப்ஸ் வழங்கும் உலகத்தரமான ஸர்விஸ் பெறும் உறுதியும். கேட்டுப் பாருங்கள் பிலிப்ஸ் வைத்திருப்பவர் யாரை வேண்டுமானாலும். இந்த உறுதியை வேறு எவருமே அளிக்க முடியாது.

**N 2218**

கைக்கு அடக்கமான உள்ளமைந்த எலெக்ட்ரெட் மைக்ரோஃபோன். பியானோ-கீ கண்ட்ரோல்கள், 1800 mW உச்ச பவர் அவுட்புட்டுடன். பேட்டரி, மெயின்ஸ், வெளிப்புறம், வீட்டினுள் எங்கும் எந்த நிலையிலும் 'ப்ளே' மற்றும் ரெக்கார்ட் செய்யவல்லது.

**AM 122**

உள்ளமைந்த எலெக்ட்ரெட் மைக்ரோஃபோன், 1250 mW உச்ச பவர் அவுட்புட்டுடன். டேப் முடிந்ததும் தானே நிறுத்திக்கொள்ளும் வசதி.

ஃபெர்ரோ கேஸட்டுகள்








# பிலிப்ஸ்

பிலிப்ஸ் — 50 ஆண்டுகளுக்கும் மேலாக இந்தியாவில் இல்லங்களெங்கும் முழங்கும் நம்பகமான பெயர்.

CASPRR-9-203 TAM

என்ன எதுவென்று உணர்வதற்குள் தீப் பந்தத்தால் முகத்தை ஒற்றியெடுத்த மாதிரி என்னுள் எரிச்சல். பழுக்கக் காய்ச்சிய ஊசிகள் கழுத்து முழுதும் ஊர்கிற மாதிரி சூடான அமிலம் வழிந்தது.

''ஸ்.... ஸ்.... ஸ்... அம்.... மா.... ஆ!''

என்னுடைய அலறல் அமானுஷ்யமாய் எழ நான் அப்படியே சரிந்தேன்.

நிமிஷ நேரத்தில் கல்லூரி வேன் வந்து வாசலில் நிற்க— நான் தூக்கப்பட்டு வேனில் கிடத்தப்பட்டேன்.

ஆஸ்பிட்டலை நோக்கி வேன் ஓடியது.

ஒரு மாதம் கழிந்தது.

கண்ணாடியில் என் முகத்தைப் பார்த்தேன். அமிலம் உண்டாக்கிய காயங்கள் பொருக்கு கட்டி உதிர்ந்து போயிருந்தது. எல்லாமே சின்னச் சின்னக் காயங்கள்... முகம் மாறின மாதிரி இருந்தது.

அம்மா புலம்பினாள். ''சின்னவள் லட்சணமா இருக்கா... லட்சணமா இருக்கான்னு ஊர் பூராவும் கண்ணைப் போட்டுத்தான் எம்மகளுக்கு இப்படி ஆச்சு! பார்த்த கண்ணெல்லாம் அவிஞ்சுபோக...!'' — அம்மா சாபமிட்டாள்.

அடுத்த வாரமே—

பெரியநாயக்கன் பாளையத்திலிருந்து ஜானகியைப் பெண் பார்க்க வந்திருந்தார்கள். மாப்பிள்ளைப் பையன் கண்ணுக்கு அழகாய் இருந்தான். பேங்க் உத்தியோகம். பையனைப் பெற்றவர்கள் சாதுவாய்தெரிந்தார்கள்.

ஜானகியைப் பார்த்த உடனேயே அவர்களுக்கு ரொம்பவும் பிடித்துப் போயிற்று.

''இந்தப் பொண்ணுதான் உங்க ரெண்டாவது பொண்ணு?'' என்னைச் சுட்டிக் காட்டிப் பையனின் அப்பா என்-அப்பாவிடம் கேட்டார்.

''ஆமா!'' என்றார் அப்பா.

''முகத்துலென்ன திட்டுத்திட்டா இருக்கு?''

''காலேஜ் கெமிஸ்ட்ரி லேப்ல... கொதிக்கிற அமிலம் மூஞ்சியில் பட்டுடுத்து.''

''அடேடே... அமிலம் கண்ணில இன்னில பட்டுட்டதா?'' மாப்பிள்ளையின் அப்பா கவலையாய்க் கேட்டார்.

''அந்த சௌடேஸ்வரி அம்மன் புண்ணியத்துல அமிலம் கண்ணுல படாம தப்பிச்சுட்டா.''

அதற்குப் பிறகு ஒரு அரை மணி நேரம் கல்யாண விஷயங்களைப் பேசிவிட்டுப்புறப்பட எழுந்தார் பையனின் அப்பா.

வந்தவர்கள் புறப்பட்டுப் போனதும் அப்பா நிறைவாய்ச் சிரித்தபடி தோளில் போட்டிருந்த துண்டால் முகத்து வியர்வையைத் துடைத்துக் கொண்டார். வெற்றிலைப் பாக்குத் தட்டத்தைத் தன் பக்கம் நகர்த்திக்கொண்டு ஜானகியைப் பார்த்தார்.

''பார்த்தியாம்மா... ஜானகி...? இது வரைக்கும் வந்த மாப்பிள்ளைகளிலேயே இந்தப் பையன்தான் லட்சணமானவன்! பார்க்கிற பார்வையிலேயே ஒரு குணுமை தெரியுது. குடும்பமும் மரியாதைப்பட்ட குடும்பம்.'' அப்பா சொன்னதைக் கேட்டு ஜானகி புன்னகைத்தாள்.



இன்றைய மாணவர்கள் ஆசிரியரைக் காட்டிலும் புத்திசாலியாக இருக்கிறார்கள். உதாரணத்திற்கு ஒன்றுசொல்கிறேன்.

நான் பள்ளியில் படிக்கும் காலத்தில் திரு நடேச முதலியார் உ. வே. சாமிநாத ஐயர் சிடர் சிவப்பிரகாசம், கி. ஆ. பெ. விஸ்வநாதன் போன்றவர்கள் எனக்கு ஆசிரியராக இருந்தார்கள். இதனைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள் என்று மாணவர்களிடம் கேட்டேன்.

அதற்கு மாணவர்களில் ஒருவன், ''பரவாயில்லை சார். உங்களுக்காவது நல்ல வாத்தியாராக் கிடைச்சிருக்காங்க'' என்று சொன்னான்.

சமீபத்தில் லால்குடியில் நடைபெற்ற வழக்காடு மன்றம் நிகழ்ச்சி ஒன்றில் பேராசிரியர் மு. கணபதி சொல்லக் கேட்டவர்:

எம். இராஜேந்திரன்

சந்தோஷ விநாடிகளில் எல்லாரும் நீந்திக் கொண்டிருந்தபோது தரகர் தயக்கமாய் உள்ளே நுழைந்தார்.

''ஒரு சங்கடமான விஷயமுங்க!'' — தயக்கமாகப் பேச ஆரம்பித்தார் தரகர்.

''என்ன பொன்னுசாமி?''

''அதுல பாருங்க... நமச்சிவாயம்! உங்க பொண்ணு ஜானகியை எல்லாருக்குமே பிடித்தம்தான். ஆனா உங்க ரெண்டாவது பொண்ணைப் பார்த்ததும் அவங்க மனசுல ஒரு அருவை விழுந்திருக்க போலிருக்கு. அமிலம் பட்டு தோலோட நிறம் மாறினதை அவங்க நம்பலே. அந்தப் பொண்ணுக்கு ஏதாவது தோல் வியாதி இருக்கும்னு பேசிக்கிட்டாங்க... நானும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். பையனோட அம்மா பிடிவாதமா வேண்டாம்னு சொல்லிட்டாங்க... 'நான் சொல்றேன்னு தப்பா நினைக்காதிங்க நமச்சிவாயம்! பெரிய பெண்ணைப் பார்க்க வர்றப்ப சின்னப் பெண்ணை எங்கேயாவது அனுப்பிச்சுடுங்க... இல்லேன்னா பெரிய பொண்ணுக்குக் கல்யாணம் ஆறது கஷ்டம்...''

அப்பாவும் அம்மாவும்—

ஆழமாய் அதிர்ந்து போய் நிற்க—

நான் அழுவதா சிரிப்பதா என்று புரியாமல் விழித்தேன்.

# உபகாரத்தில் உயர் நாடு

டெல்லியில் சந்திரசேகரும் அவர் மனைவி கமலாவும் ஒரு பெரிய வீட்டில் தங்கள் பிள்ளையுடன் இருந்து கொண்டிருந்தார்கள். சந்திரசேகர் ஒரு பெரிய வேலையிலிருந்து ரிடையர் ஆகிவிட்டார். அவர் பிள்ளை ஒரு கம்பெனியில் பெரிய உத்தியோகம் பார்க்கிறார்.

சந்திரசேகரும் கமலாவும் தங்கள் ஊரான தஞ்சாவூருக்குப் போய்விட்டுத் தமிழ்நாடு எக்ஸ்பிரஸில் டெல்லிக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தார்கள். வைகாசி மாதம் காலை வெய்யில். பாதி வழியில் திடீரென்று சந்திரசேகருக்கு உடம்பு ரொம்ப கொதிக்கலாயிற்று. எழுந்து நிற்கவும் முடியவில்லை. ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்த ஒரு டாக்டர் சந்திரசேகரைப் பரிசோதித்தார். 106 டிகிரி ஜுரம் இருந்தது. சந்திரசேகருக்குப் பாதி நினைவுதான் இருந்தது. ''உடம்பு ரொம்ப மோசமாக இருக்கிறது; அடுத்த ஸ்டேஷனில் இறங்கி ஆஸ்பத்திரியில் சேர்த்துவிடுங்கள்'' என்று அந்த டாக்டர் சொன்னார். அத்துடன் அந்த டாக்டர் தம் வேலை முடிந்து விட்டதாகக் கூறினார். சந்திரசேகருக்கு வயது 70. கமலாவுக்கு வயது 60.

அடுத்த ஸ்டேஷனில் நாலு கூலி ஆட்கள் உதவியுடன் கணவரை இறக்கினாள் கமலா. ரயிலும் புறப்பட்டுப் போய்விட்டது. கமலாவுக்கு உதவ ஒருவரும் முன்வரவில்லை. 114 டிகிரி வெய்யில். முன்பின் தெரியாத ஊர். யாராவது ஆம்புலன்ஸ் வரவழைத்துக் கமலாவையும் அவள் கணவரையும் ஓர் ஆஸ்பத்திரியில் சேர்த்திருக்கக் கூடாதா? பரோபகாரத்துக்குப் பேர் போன நம் தேசத்தில் அப்படிச் செய்வதற்கு ஒருவரும் தயாராக இல்லை. கமலா ஒரு தள்ளு வண்டியை ஏற்பாடு செய்து, அதில் தன் கணவரைப் படுக்கவைத்து நாலு கூலி ஆட்களைத் தள்ளச் செய்து ஓர் ஆஸ்பத்திரியைக் கண்டுபிடித்து அதில் தன் கணவரைச் சேர்த்தாள். ஆஸ்பத்திரியில் சேர்ந்த சற்றுநேரத்தில் சந்திரசேகர் இறந்து விட்டார்.

ரயிலிலிருந்து இறங்கும்போது கமலா ரயிலில் சந்திரசேகரைப் பரிசோதித்த டாக்டரிடம் சொன்னாள்: ''நீங்கள் டெல்லி ஸ்டேஷன் அடைந்ததும் ஒலிபெருக்கியில் நானும் என் கணவரும் எந்த நிலைமையில் எந்த ஊரில் இறங்கி இருக்கிறோம் என்பதைச் சொல்லுங்கள். என் பிள்ளை எங்களை அழைத்துக் கொண்டு போக வந்திருப்பான். அவன் உடனே காரில் இங்கு வந்து விடுவான்.''

ஆனால் அந்த நல்ல டாக்டர் ஒன்றுமே செய்யவில்லை. ஆஸ்பத்திரியில் சாதாரண வேலை செய்து கொண்டிருந்த ஒரு பையன் தான் கமலாவுக்கு உதவி செய்தான். அவன்தான் டெல்லிக்குத் தந்தி கொடுத்தான். செய்தி அறிந்து பிள்ளை வருவதற்கு இரண்டு நாட்கள் ஆகிவிட்டன. பாவம் கமலா! தன் கணவர் உடலை வைத்துக் கொண்டு தனியாகச் சோகமே உருவாக உட்கார்ந்து கொண்டிருந்தாள். இது என்ன பயங்கர நிலை! ''கோவிலில் போய்க் கடவுளைப் பார்க்கவே வேண்டாம். கஷ்டப்படுபவர்களுக்கு உதவி செய்தால் அதுவே கடவுளுக்குப் பூஜை செய்வதற்குச் சமானம்'' என்று அறிவோம். ஆனாலும் உதவ யாரும் முன் வருவதில்லை. ஏன்?

இதை எழுதுகிற எனக்கும் 70 வயது ஆகிறது. என் கணவருக்கு 76 வயதாகிறது. நாளைக்கு ஏதாவது ஒரு அவசியம் நேர்ந்தால் ரயிலில் போவதென்றால்... எனக்குப் பயமாக இருக்கிறது.

—காமாக்ஷி.

## நம்ப முடியாதது, ஆனால் நடந்தது!

ஏதாவது காரியம் சாதிப்பதற்கு ஒருவர் தீவிரமாக இருக்கிறார் என்றால், 'அவன் ஒற்றைக் காலில் நிற்கிறான்' என்று குறிப்பிடுவது வழக்கம்.

பழனியில் ஒரு பக்தர் முருகனை ஒற்றைக் காலில் சென்று தரிசித்திருக்கிறார்!

சென்ற 17-7-83 அன்று கோவை மாவட்டம் முத்தூமுடி இரண்டாம் பிரிவு என்ற ஊரைச் சேர்ந்த வாலிபர் எஸ். சுப்பிரமணியம், பழனியாண்டவர் கோயில் அடிவாரத்திலிருந்து சந்நிதி வரை மொத்தப் படிக்கட்டுக்களையும் ஒற்றைக் காலில் நொண்டியடித்தபடி ஏறி ஆண்டவனைத் தரிசித்தாராம்.

முதலில் இடது காலில் மட்டும் நொண்டியடித்துக் கொண்டே மலை ஏறிவிட்டு, அடுத்து வலது காலில் நொண்டியடித்துக் கீழே இறங்கி வந்திருக்கிறார் இவர்.

இவருடன் பழனி தேவஸ்தான ஊழியர் எஸ். ஆறுமுகம் என்பவர் கூடவே நடந்து சென்று பார்வையிட்டாராம்.

—இரணியல் 'கலை'



# மகன் தந்தைக்கு...

வாதூலன்





"இந்த அப்பாவை என்ன செய்தால் தேவலை?'' என்று ஆபிசிலிருந்து வருகிற போதே பல்லை நறநறத்துக் கொண்டு வந்தான் ராஜாராமன்.

உள்ளே அடுக்களையில் காரியமாக இருந்த வத்சலா வெளியே வந்தாள்.

''என்ன ஆச்சு?''

''என்னவா! அப்பா இருக்காரே..... பாங்கில் ஏஜண்டிடம் சொல்லிக் கடன் வாங்கியிருக்கார். மூணு மாசமாகிறதாம். இன்னும் திருப்பித் தரலே. இன்னிக்கு அவர் எனக்கு போன் பண்ணின வுடன், நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம் போலிருந்தது'' என்று படபடவென்று பொரிந்து தள்ளினான்.

''எங்கே காணும் அப்பாவை?''

''உபந்நியாசத்துக்குப் போயிருக்கார், அம்மா கூட.''

''பேஷ்! அப்பாவுக்குக் கூட நல்ல புத்தி வருகிறது!'' என்று கிண்டலாகச் சொல்லி விட்டு, வத்சலா கொண்டு வந்த காப்பியைக் குடித்தான். ஈஸி சேரில் சாய்ந்துகொண்டு கிடைத்த பத்திரிகையைப் புரட்டினான். விளையாடிவிட்டு வந்த அருண், ''குட் ஈவினிங் டாடி!'' என்று சிறிது உற்சாகமாகச் சொன்னவன், எதிர்பார்த்த பிரதிபலிப்பு அப்பாவிடம் காணாததால், ''அப்பாவுக்குக் கோபமா?'' என்று வத்சலாவின் காதைக் கடித்தான்.

''ஆமாம். நீ ஏதாவது டொனேஷன் அது இது வென்று இப்போ கிளப்பாதே!'' என்றாள் அவள். பிறகு நிமிர்ந்து, எதிரே தெரிந்த புகைப்படத்தைப் பார்த்தான்.

நாராயணனும் சிவகாமியும் சேர்ந்து எடுத்துக்கொண்ட படம். ஆனால் அப்பாவைப் பற்றிப் பேச்செடுத்தால் கூட முகம் மாறி விடும் ராஜாராமனுக்கு. முழுக்க முழுக்க அம்மாதான் அவனுக்கு எல்லாமே...

''உனக்குத் தெரியாது வத்சலா. என் அப்பாவுக்கு எல்லாக் கெட்ட பழக்கமும் உண்டு. இந்த அளவுக்கு நான் நல்ல நிலைமையில் இருக்கிறேன் என்றால் அது அம்மாவால்தான்!'' என்று பல முறை சொல்லியிருக்கிறான். அவ்விதம் சொல்கையில் அம்மாவின் மீதுள்ள பாசத்தைக் காட்டினும் அப்பாவிடம் தெரிந்த சீற்றத்தைக் கண்டு அவள் ஆச்சரியப் படுவாள்.

ஆனால் ராஜாராமனைச் சொல்லிக் குற்றமில்லை. அவன் வளர்ந்த விதம்...

நாராயணனுக்கு நிரந்தர உத்தியோகம் கிடையாது. ஏதோ ஏஜன்ஸி பிஸினஸ் என்று வைத்துக் காலம் கழித்து வந்தார். கெட்ட சகவாசம் நிறைய. கொஞ்சம் கூட வீட்டு விஷயங்களில் அக்கறையே கிடையாது. குடும்பத்தில் அன்றாடக் காரியம், ராஜாராமனின் படிப்பு — எல்லாமே சிவகாமிதான் பொறுப்பு.

ராஜாராமன் மேலே பட்டப் படிப்புத் தொடர வேண்டிய சமயம். சிவகாமி மெதுவாகக் கணவனிடம் சிபாரிசு செய்தாள். ''ஏன்னா! ராஜா மேலே படிக்கணும் என்கிறானே!'' என்றாள்.

''வேறே வேலை இல்லே. இவன் என்ன படிச்சுக் கிழிச்சு ஐ. ஏ. எஸ். உத்தியோகம் பார்க்கப் போறானா? படிச்சது போதும். வேலைக்குப் போகட்டும்!''

ஆனால் சிவகாமிக்கு மனசு கேட்கவில்லை. நாராயணனுக்குத் தெரியாமல் நகையை அடகு வைத்துக் கல்லூரியில் சேர்வதற்கான பணத்தைச் செலுத்தினாள். அவர் கேள்விப் பட்டதும் ஏக ரகளை செய்து கூச்சல் போட்டார். தான் ரேஸுக்காக வைத்திருந்த தொகை இது போல் 'அநியாயமாக'ச் செலவழிகிறதே என்ற வருத்தம்.

இருந்தும் எவ்வளவோ சிரமத்துக்கு நடுவே ராஜாராமன் படித்துப் பாஸ் செய்து வேலையில் அமர்ந்தான். முதல் சம்பளம் கிடைத்த உடன் அம்மாவுக்குச் சாஷ்டாங்கமாகக் கீழே விழுந்து நமஸ்காரம் பண்ணினான். ''கொஞ்சம் இரேன். அப்பாவும் வந்துவிடட்டும்!''

''அப்பாவா!'' என்று ஒரு சீறு சீறினான். வேறு ஏதும் சொல்லவில்லை. இருந்தும் கணவர் வந்தவுடன் பிள்ளையிடம் சொல்லி, வற்புறுத்தி நமஸ்காரம் பண்ண வைத்தாள். ஏதோ ஒப்புக்குச் செய்து விட்டு ராஜாராமன் முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

இதே மாதிரிதான் சியாமளா விவாகத்தின் போதும் ஆகிவிட்டது. இத்தனைக்கும் நல்ல மனிதர்கள். வரதட்சிணை அதிகம் கேட்கவில்லை. உறவுக்காரர்கள் மட்டும் நிறையப் பேர் வெளியூரிலே இருப்பதால் அவர்கள் வந்து போகும் பயணச் செலவு மட்டும் கேட்டார்கள். நாராயணன் பிடிவாதமாக இருந்தார். ''வேண்டாமே! வேறே வரனா இல்லே!''

சியாமளா தனியே ராஜாராமனிடம் வந்து அழுதாள். தன்னொத்த பெண்கள் எல்லாம் மணமாகிக் குழந்தையும் குடித்தனமுமாய் இருக்கும்போது தான் மாத்திரம் கன்னியாயிருப்பது உறுத்தாதா என்ன?

''நீ அழாதே சியாமி. நான் ஏற்பாடு பண்றேன்.''

ராஜாராமனுக்குச் சிரமம்தான். அந்த ஆண்டு கம்பெனியில் ஊக்க போனஸ் ஏதும் கொடுக்கவில்லை. போதாததற்குப் பிடிப்பு வேறு அதிகம். இருந்தும் கூட, எப்படியோ சமாளித்து அவன் ஏற்பாடு செய்தான். இது தான் சாக்கு என்று அப்பா அறவே ஒதுங்கிக் கொண்டார்.

மணமாகிக் குடி வந்தபோது, இதுபோல் நிறையச் சமாசாரங்கள் வத்சலா கேள்விப் பட்டாள். ஆனால் அவ்வளவாகப் பெரிதாக எடுத்துக் கொள்ளாமல், ''ஒவ்வொருத்தர் ஒவ்வொரு சுபாவம்!'' என்று மெதுவாகக் கணவனைச் சமாதானப்படுத்துவாள். அவர் முன்பு எப்படி இருந்தாரோ? மணமாகித் தான் இந்த வீட்டுக்கு மருமகளாக வந்த பிறகு நாராயணனால் ஏதும் தொந்தரவு ஏற்பட்டதே கிடையாது. ஏதோ தான் உண்டு, தன் வேலை உண்டு என்று இருப்பார். தகப்பனாரை ராஜாராமன் நடத்தும் விதம் ஓரோர் சமயம் உறுத்தும். அருண் பிறந்த பிறகு சிறிது மாறுதல் ஏற்படும் என்று எதிர்பார்த்தாள். ஊஹூம்.

என்றைக்கு வீட்டில் களேபரம் ஆகப் போகிறதோ என்று வத்சலா பயந்துகொண்டிருந்தாள்.

பயந்தது நடந்தது — மூன்று நாள் கழிந்த பின்தான். ஓரமாகச் சாய்ந்தாற்போலிருந்த நாராயணனை நோக்கி, ''உங்களால் என் மானமே போகிறதப்பா!'' என்று சள்ளென்று ராஜாராமன் எரிந்து விழுந்தான்.

நாராயணன் நிமிர்ந்தார். இதை எதிர்பார்த்தவர் போல் காணப்பட்டார். முகத்தில் சலிப்புத் தெரிந்தது. ''பாங்க் லோன் தானே, அதுதான் மாசக் கடைசியிலே கட்டி விடுகிறேன் என்று ஏஜெண்டிடம் சொன்னேனே!''

''ஆமாமாம். தெம்பாக இருந்த நாளெல்லாம் சம்பாதிச்சுக் கிழிச்சாச்சு, இப்போ

''இளநீர் சீவினேன்... இருபது வருஷம் திட்டிட்டாங்க!''

''நம்பவே முடியலியே!''

''என்னாலேயும்தான். இளநீர் சீவறப்போ பக்கத்தில நின்னுக்கிட்டு இருந்தவன் தலையையும் சேர்த்து எப்படிச் சீவினேன்னு!''

—சிவலட்சுமி



எப்படிப் பணம் வருமோ?'' என்று உதட்டோடு முணு முணுத்தான் ராஜாராமன்.

அவர் இப்போது அவமானமாக உணர்ந்தார். மனைவி, மருமகள், பேரன் — இத்தனை பேர் இருக்கும்போது இது போலக் கேவலப் படுத்துகிறானே என்று தோன்றியது. ''சரி தாண்டா! எனக்கு எல்லாம் தெரியும். பெரிய இவன், புத்தி சொல்றான்!'' — கையிலிருந்த தினசரியை வீசினார்.

வத்சலா உடனே கணவன் தோளை அழுத்திக் கொண்டு போனாள். ''என்ன இது! மரியாதைஇல்லாமல் மேலே பேசிக்கொண்டே போனால்...''

''மரியாதை! அது ஒண்ணுதான் குறைச்சல்!'' என்று முனகி விட்டு ராஜாராமன் மௌனமானான். வத்சலா தன் பாட்டுக்குக் காரியங்களைக் கவனிக்கலானாள். பரிதாபமாகக் காட்சியளித்த மாமனாரை ஓரக் கண்ணால் பார்த்தாள். இவருக்கு ஏன் இவ்விதம் புத்தி போகிறது? கௌரவமான பெரிய பதவியில் இருக்கிறார் பின்னை. அதற்கு ஏற்றாற் போல் நடந்து கொள்ளாமல் ஏன் இதுபோல் கெட்ட பெயர் சம்பாதித்துக் கொள்கிறார்? ஒருவேளை பழைய 'வழக்கங்கள்' தொற்றிக் கொண்டு விட்டதோ? அதற்குத்தான் பணம் தேவையாயிருக்கிறதா?

'சே! இருக்காது!' என்று சொல்லித் தலையைக் குலுக்கிக் கொண்டாள் வத்சலா. திடீரென்று எங்கோ படித்தது ஞாபகத்துக்கு வந்தது. சில விதிமுறைகளை மீறுவதில் வாலிபர்களுக்கு ஒரு 'த்ரில்' உண்டாகுமாம். அது மாதிரி பிள்ளையைத் தொந்தரவு படுத்துவதில் அவருக்கு ஏதாவது திருப்தி வருகிறதோ? யோசித்துக் கொண்டேயிருந்தாள்.

மூன்று வாரம் ஆகியிருக்கும். தனது வேலையில் முழுமையாக ஈடுபட முடியாமல் வத்சலாவை அந்த அழுகைச் சப்தம் ஓயாது ஒலித்துக் குறுக்கிடு செய்து கொண்டே இருந்தது. எட்டிப் பார்த்தாள். எதிர் ஃப்ளாட்டில் ஒரு சித்திக்காரர். இரண்டாவது கல்யாணம் பண்ணிக் கொண்டிருந்தார் அவர். அழுதது. மூத்தாளின் குழந்தைதான்.

''சே! ஆனாலும் இவ்வளவு இளையாள் மோகம் கூடாது. குழந்தையை இப்படியா படுத்துவது?''

வத்சலாவின் விமரிசிப்பு வாசல் ஓரமாக நின்றிருந்த வேலைக்காரி காதில் விழுந்து விட்டது போலும். சிறிது நெருங்கி, மெதுவாக ''அவங்களைச் சொல்லாதீங்க''என்றாள்.

''பின்னே என்னவாம்! எப்பப் பார்த்தாலும் அழுது கொண்டே இருக்கிறதே. சித்தி கவனிக்கக் கூடாதா?''

''கவனிக்கிற மாதிரியா இருக்குது! அந்தப் பிள்ளை பலே கைகாரன். நேத்து பாருங்க, பிளேடால் கீறிக் கொண்டு விட்டது. பத்து நாள் முன்னாலே பக்கெட்டைக் காலில் போட்டு ஒரே ரகளை. இந்த மாதிரி ஏதாவது பண்ணினால்தான் நாலு பேர் கவனிப்பாங்க என்கிற எண்ணம்!'' அவள் சிறிது நிறுத்தினாள். ''நான்தான் வீட்டிலேயே இருக்கிறேனே? எனக்குத் தெரியாதா?''

அவள் சொன்னது வத்சலாவின் மூளைக்குள் சரேலென்று பாய்ந்தது. மின் அதிர்வு ஏற்பட்டாற் போல் கையை உதறினாள்.

CORPORATION OF MADRAS
HEALTH DEPARTMENT
NOTIFICATION
WANTED
Applications are invited for the post of
A MICROBIOLOGIST
in the C.D. Hospital, Corporation of Madras.
1. Qualification: M.Sc. (Microbiology). Preference will be given to persons with experience in Bacteriological Laboratory work and Research.
2. Age limit: Minimum 18 years. Maximum [illegible] years. (S.C. and S.T. [illegible] years)
3. Last date for the receipt of the applications [illegible]
4. Scale of pay Rs. 750—[illegible]
Eligible candidates may apply in a plain

சென்னை மாநகராட்சி சுகாதார இலாகாவிற்கு ஒரு நுண்ணுயிரியல் நிபுணர் தேவை என்று அண்மையில் வந்த விளம்பரத்தில், கல்வித் தகுதி எம். எஸ்ஸி என்று போட்டு, குறைந்த பட்ச வயது 18 இருக்க வேண்டும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. 18 வயதுக்கு முன்பே — ஏன் 18 வயதிலேயே கூட — எம். எஸ்ஸி எப்படி முடிக்க முடியும்? புரியாத புதிராக இருக்கிறதே!

—வாமனன்.

வீட்டுக்குச் சீக்கிரமாகவே திரும்பி வந்தான் ராஜாராமன். முகத்தில் ஒரே உற்சாகம். ''வத்சல்! கிளம்பு. எனக்கு ஒர்க்ஸ் மானேஜர் ப்ரமோஷன் ஆகியிருக்கிறது. எல்லாருக்கும் ஓட்டலில் டின்னர். ஊம் சீக்கிரம். அருண்... அம்மா....''

வத்சலா குறுக்கிட்டாள். ''அப்பா?''

ராஜாராமின் முகம் மாறியது. ''கூப்பிட்டால் மட்டும் வரப் போகிறாராக்கும்?''

''அது என்ன? வருவார். நானே கூப்பிடுகிறேன்.''

''ஏதாவது 'வில்லி'யாகப் பண்ணாதே. என்னை அவமானப்படுத்தியது போதாதாக்கும்?'' என்றான் ராஜாராமன் எரிச்சலுடன்.

''நீங்கள் 'வில்லி'யாக நடந்து கொள்வதால்தான் அவர் உங்களை அவமானப்படுத்துகிறார்.''

''நானா?''

''ஆமாம். ஒரு நாளைக்காவது அப்பா என்கிற மரியாதை கொடுத்திருக்கிறீர்களா? உங்களோட சுக துக்கம் எதையாவது அவரிடம் சொல்லியிருக்கிறீர்களா? சின்ன வயசில் அவர் தப்பு செய்திருக்கலாம். அதற்காக இப்படியா அந்நியன் மாதிரி ஒதுக்குகிறது? அதனால்தான் தப்புக் காரியம் பண்ணியாவது உங்கள் கவனத்தை இழுக்கப் பார்த்திருக்கிறார்.'' என்றாள் வத்சலா படபடவென்று.

''அட!''ராஜாராமன் அயர்ந்துபோனான். சில நிமிடம் மௌனமாக இருந்தான். ''நீ சைகாலஜி கிராஜுவேட் இல்லையே வத்சலா!'' என்று கேட்டான். இருந்தாலும், நாராயணன் வந்ததும் அவர் காலில் விழுந்து கணவன் ஆசி பெற்றதும், அவரையும் சேர்த்துக் கொண்டே எல்லாருமாக வெளியே சாப்பிடப் போனதும், வத்சலாவுக்குத் திருப்தியையும் இதத்தையும் அளித்தன.

எதிர் வீட்டுக் குழந்தைக்கு மானசீகமாக நன்றி செலுத்தினாள்.



அமெரிக்காவில் காலட்சேபங்கள் செய்வதற்காக சுமார்இரண்டுமாதம் பயணம் மேற்கொள்ளவிருக்கும் டி.எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரியை அவரது வீட்டில் சந்தித்தபோது...

நிருபர்: இன்றைய சமுதாயத்தில் ஹரிகதா காலட்சேபங்களெல்லாம் அவசியம்தானு?

பாலகிருஷ்ண சாஸ்திரி: இது என்ன கேள்வி? இன்றைக்குத்தான் காலட்சேபங்கள் மிகவும் அவசியம். ராமாயணம், மகாபாரதமெல்லாம் பல்லாயிரம் வருஷங்களுக்கு முன் எழுதப்பட்டாலும் இன்றைய வாழ்க்கைக்கு அவசியமான எத்தனையோ விஷயங்களை எடுத்துச் சொல்கின்றன. மனிதன் எப்படி வாழவேண்டும், எப்படி வாழக்கூடாது என்று வழி காட்டுகின்றன. காலட்சேபம் என்ருல், ஏதோ 'கிராமியக் கலை' என்று தப்பாக அர்த்தம் பண்ணிக் கொள்கிருர்கள். அதை அரசியலுக்கும் விளம்பரத்துக்கும் பிரசார சாதனமாகப் பயன் [redacted]



பால: இல்லை. தமிழில்தான். ஆனுலும் சம்ஸ்கிருத ஸ்லோகங்களுக்குத் தமிழில் மட்டுமின்றி ஆங்கிலத்திலும் விளக்கம் தருவேன்.

நிரு: இருந்தாலும் முழுக்க முழுக்கப் புரிந்து கொள்ள முடியாதே! காலட்சேபம் என்பது கச்சேரி போல இல்லையே!

பால: அது தப்பு. காலட்சேபம் என்பது இயல், இசை, நாடகம் என்று மூன்றும் இணைந்தது. உதாரணமாக புராணத்திலிருந்து பகவானின் 'விஸ்வரூபம்' பற்றி இசையுடன் ஸ்லோகம் சொல்லி, அபிநயத்துடன் விளக்கும்போது கதை கேட்கும் ஒவ்வொருவரும் மானசீகமாகக் கடவுளைத் தரிசனம் செய்வார்கள். தமிழ் தெரியாத அமெரிக்கர்கள் என் காலட்சேபம் கேட்க வரும்போது, ''நான் சொல்வது புரிகிறதா?'' என்ருல் ''புரிந்து கொள்வதில் சிரமமேதுமில்லை'' என்பார்கள். ஒரு தடவை ஹென்றி பெர்க்ஸ் என்ற அமெரிக்கத் தம்பதி என் காலட்சேபத்தை டேப் பண்ணிக் கொண்டு போய், மறுநாள் என்னைச் சந்தித்தபோது, [redacted]



''உங்கள் கணவரை உங்களுக்கு முன்னரே தெரியுமா?''

''கட்சி சம்பந்தப்பட்ட பணிகளைப் பற்றி விவாதிக்க நிறையத் தடவை என்னைச் சந்தித்து இருக்கிருர்.''

''கல்யாணம் எப்போது நிச்சயிக்கப்பட்டது?''

''நான் அமைச்சராவதற்கு முன்பே.''

''நிச்சயம் ஆன பிறகு இருவரும் சந்தித்திருப்பீர் களே?''

''அப்போதும் கட்சிப் பணிகள் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தோம்.''

''அவரிடம் உங்களைக் கவர்ந்த விஷயம்?''

''குறிப்பாக நான் கவனிக்காததால் சொல்வதற்கு ஒன்றுமில்லை.''

''கல்யாணத்துக்குப் பிறகு உங்கள் பணிகளில் அவர் தலையிட்டால்?''

''அது மாதிரி செய்ய மாட்டார் என்று எனக்கு முழு நம்பிக்கை உண்டு.''

நான் அமைச்சராக இருப்பதால் ஊரில் விவசாயத்தைக் கவனிக்க, மற்ற பணிகளைக் கவனிக்க, தமது வருங்காலக் கணவர் மிகவும் உதவியாக இருப்பார் என்கிருர்விஜயலட்சுமி.

-நமது நிருபர்

# அமெரிக்கா, அமைச்சர், அமிதாப்

திருபா: சரி: நீங்கள் [illegible] வைத்துக் கொண்டாலும் கதை கேட்க வருபவர்கள் வயதானவர்கள் தானே? காலட்சேபத்துக்கு இளைய தலைமுறையினரை இழுக்கற சக்தி இல்லேயே!

பால: நீங்கள் சொல்வதை நான் கடுமையாய் ஆட்சேபிக்கிறேன். இன்றைக்கு ஆறரை மணிக்குப் பெரம்பூரில் நான்கதை சொல்கிறேன். என்னுடன் வந்துபாருங்கள். வருபவர்களில் பாதிப் பேர் இளைஞர்கள் தான். இன்றைக்கு இளைய தலைமுறையினர் பக்தி மார்க்கத்துக்குத் திரும்பிக் கொண்டிருக்கிறார்கள். இது இன்னும் அதிகரிக்குமே யொழியக் குறையாது.

திருபா: யாருடைய அழைப்பின் பேரில் இந்த அமெரிக்கப் பயணம்?

பால: அமெரிக்காவில் ஃபிலடெல்பியா டெலிவிஷனில் பணியாற்றும் 'பாலா' என்ற தமிழர்தான் இதற்கு ஏற்பாடு செய்திருக்கிறார். நியூயார்க், பிட்ஸ்பர்க், ஹூஸ்டன், வாஷிங்டன் போன்ற இடங்களிலும், மற்றும் கனடாவிலும் இருக்கும் இந்துக் கோவில்களைப் பார்த்து, அந்த மூர்த்திகளின் பெருமையை எடுத்துச் சொல்ல வேண்டியதுதான் என் பணி. பணம் பண்ணுகிற எண்ணத்தில் நான் போகவில்லை. முழுக்க முழுக்கப் பக்திப் பிரசாரப் பயணம்தான்.

திரு: அமெரிக்காவில் உங்கள் நிகழ்ச்சிகளுக்குத் தமிழர்கள் மட்டும்தானே வருவார்கள்?

பால: தமிழர்கள் மட்டுமில்லே: அங்குள்ள இந்தியர்கள் – ஏன் அமெரிக்கர்கள் கூட– வருவார்கள்.

திரு: அப்படி யெனில் நீங்கள் ஆங்கிலத்தில் தான் கதை சொல்லப் போகிறீர்களா?

பால: [illegible] இல்லே ஆனாலும் இட மேகன [illegible] ஷாப்பி: இட் டேக்ஸ் மீ டு ஹைட்ஸ்!'' என்றபோது புல்லரித்தது. அமெரிக்கர் 'ஹரே கிருஷ்ணா' இயக்கம் போன்றவற்றால் பக்தி மார்க்கத்துக்குத் திரும்பிக் கொண்டிருக்கும் இந்தச் சமயத்தில் என் பயணம் அதற்குச் சிறு அளவாவது உதவும் என நம்புகிறேன். ஆண்டவன் இருபையால் எல்லாம் நல்லபடியா நடக்கணும்.

பேட்டி: எஸ். சந்திரா

## அமைச்சருக்கு 'டும் டும்'

[பதவியில் இருக்கையிலேயே ஒரு பெண் அமைச்சருக்குக் கல்யாணமாவது, தமிழகத்தில் இதுதான் முதல் தடவை. சுருக்கமான கேள்விகளுக்குப் பதில் தருகிறார் விஜய லட்சுமி.]

சேலம் மாவட்ட அ. தி. மு. க. ஒன்றியச்செயலாளரானபழனிச்சாமியை மணக்கவிருக்கிறார் கதர்த்துறை அமைச்சர் விஜய லட்சுமி. அமைச்சரின் தொகுதியான வீரபாண்டியில் சில பகுதிகள் பழனிச்சாமியின் ஒன்றியத்தில் சேர்ந்தவை.

''இது காதல் திருமணமா....?''

''இல்லே ஸார், இது முற்றிலும் பெரியவர்கள் பார்த்து நடத்தும் திருமணம்.''

''வரதட்சிணை...?''

''எங்கள் குடும்பத்தில் இந்தப் பழக்கமே இடையாது. இருந்திருந்தால் ஒரு டாக்டருக்கும் எனக்கும் திருமணமாகியிருக்கும்.''

[1]

அமிதாப்பின் தந்தை ஹரிவான்ஷ் ராய் பச்சன், தாய் தேஜி பச்சன் இரண்டு பேரும் டெல்லியில் தனியாய் இருக்கிறார்கள். அப்பா நிறைய ஹிந்திக் கவிதைகள் எழுதியிருக்கிறார். ராஜ்ய சபா உறுப்பினராகவும் இருந்தவர். ஷேக்ஸ்பியர் நாடகங்களை ஹிந்தியில் மொழி பெயர்த்து மேடை ஏற்றியிருக்கிறார். தந்தையின் உயரம் 5 அடி 4 அங். அமிதாப் 6 அடிக்கு மேல். தந்தை, தாய் இருவரும் அமிதாப் நடித்த படம் தவிர வேறு படமே பார்ப்பதில்லை.

[2]

அமிதாப் ராணுவத்தில் சேர வேண்டும் என்பது அவரது தந்தையின் ஆசை. அமிதாப்போ இன்ஜினியர் ஆக விரும்பினார். ஆனால் போதிய மார்க் வாங்காததால் சீட் கிடைக்கவில்லை. டெல்லி பல்கலைக் கழகத்தில் பி.எஸ்.ஸி படித்துவிட்டு, சினிமாவில் நுழைவதற்கு முன் 6 ஆண்டுகள் கல்கத்தா கம்பெனி ஒன்றில் வேலை பார்த்தார்.

[3]

அமிதாப்புக்கு ஓவியம் வரைவதில் ஈடுபாடு உண்டு. சிதார் வாசிக்கத் தெரியும். சிறு வயது முதலே நடிப்பில் ஆர்வம் உண்டு. பள்ளியில் படிக்கும்போது (வயது 10) நாடகத்தில் 50 வயது இன்ஸ்பெக்டர்–ஜெனரல் ரோலில் நடித்து, முதல் பரிசு வாங்கியிருக்கிறார். இள வயது முதலே ராஜீவ் காந்தியும் அமிதாப் பச்சனும் நண்பர்கள்.

-மௌலி



# எத்தகைய சோதனைகளையும் தாங்குகின்ற "ராம்கோ"

'ஆம். "ராம்கோ"வின் சோதனை முறைகள் "ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகளை என்றென்றும் வலிமையுடன் இருக்க வகை செய்கின்றன.

பளு தாங்கும் சக்தி, அமில எதிர்ப்பு மற்றும் நீர் உறியாத் தன்மைகள் போன்ற பல சோதனைகளுக்குட்பட்டு தயாரிக்கப்படுபவையே ''ராம்கோ'' அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகள்.

அதி நவீன தொழில் நுட்பம்—மிகக் கடுமையான தரக்கட்டுப்பாடு— இவையே ''ராம்கோ'' அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகள் நிரந்தரப் பாதுகாப்பைத் தருவதன் இரகசியம்.

**Ramco**

**ராம்கோ அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகளும் மற்ற உபகரணங்களும்– தரமான கூரைகளுக்கு மட்டுமல்ல நிரந்தரமான பாதுகாப்புக்கும் கூட.**



சதர்ன் அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் லிமிடெட்
739, அண்ணா சாலை, சென்னை-600 002. போன்: 82006
பரிபூரண விற்பனையாளர்கள்: ராஜா சாரிடி டிரஸ்ட்.

CAS/SACL/11/83/TAM-A




அலாரம் அடித்தது காதில் விழாமல் அவர்கள் இருவரும் அலங்கோலமாகத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். ஐந்தரை மணிக்கு வைத்திருந்த அலாரம்.

காலைக் கதிரவனின் ஒளிக் கீற்று சுளீரென்று முகத்தில் பாய, அவன் திடுக்கிட்டு எழுந்தபோது மணி ஆறைத் தாண்டிவிட்டிருந்தது. அருகில் ரீமா நிச்சிந்தையாக உறங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்தபோது கோபம் வந்தது.

ஆறரை மணிக்கு ப்ரீஃபிங். எழுக்கு டேக் ஆஃப். என்ன பெண் இவள்? கணவனை எழுப்ப வேண்டும் என்ற பொறுப்புணர்ச்சி கொஞ்சமாவது இருக்குமானால் இப்படித் தூங்குவாளா?

"ரீமா...."

அவளிடமிருந்து பதில் இல்லை. அவன் அவளை முரட்டுத்தனமாக உலுக்கினான்.

இரவு பன்னிரண்டு மணியாகி விட்டது பார்ட்டியிலிருந்து திரும்பும்போது. அதிகாலையில் டேக் ஆஃப் இருக்கும்போது அத்தனை நாழி பார்ட்டியில் இருந்தது தவறு. அதிகமாகக் குடித்தது தவறு. அளவோடு குடித்திருந்தால் இப்படி அலாரம் அடித்தது காதில் விழாமல் தூங்கியிருக்க மாட்டோம்.

தலைக்குள் யாரோ சம்மட்டியால் அடித்துக் கொண்டிருந்தார்கள். உடம்பெல்லாம் வலி, சோர்வு. ஓ, இன்றைக்கு ப்ரீஃபிங்குக்கு லேட்டாகப் போய் நன்றாக வாங்கிக் கட்டிக் கொள்ளப் போகிறேன்.

சனியன் பிடித்தவள் இன்னும் எழுந்திருக்க மாட்டேனென்கிறாளே!

"ஐ ஸே, வில் யூ கெட் அப் ஆர் நாட்?"

ரீமா பாதிக் கண்களை விழித்து அவனைப் பார்த்தாள்.

"மணி என்ன டார்லிங்?"

"ஆறு பத்து. எழுந்திரு. டீ போடு. ஐ ஆம் லேட் ஆல்ரெடி."

ரீமா கண்களை இறுக மூடிக் கொண்டாள். அவன் அவசரமாகப் பாத்ரூமுக்கு ஓடினான்.

திரும்பி வந்து பார்த்தபோது அவள் மீண்டும் தூக்கத்தில் ஆழ்ந்திருந்தது தெரிந்தது. லேட்டாகியதால் ஏற்கனவே உண்டான எரிச்சல் அவளுடைய அலட்சியத்தைப் பார்த்துக் கோபத் தீயாக மாறியது.

"எழுந்திருக்கப் போகிறாயா இல்லையா, ரீமா?"

"ஓ டார்லிங், ஒரு நாள் அங்கே போய்த் தான் டீ குடிக்கக் கூடாதா?"

"டாமிட்."

"என்னைத் திட்டுகிறீர்களா?"

"இன்னிக்கு ஒருடீகூட இல்லாமல் வெறும் வயிற்றோடுதான் ஃப்ளையிங்."

"ஃப்ரிட்ஜ்ல ப்ரெட் இருக்கு. ஹாவ் எ பைட் டார்லிங்."

"நீயே சாப்பிடு" என்று கத்திவிட்டு, பூட்டுக்குள் காலைத் திணித்துக் கொண்டான். ஆறு இருபத்திரண்டு. இன்னும் எட்டு நிமிடங்கள்தான் உள்ளன. புல்லெட்டில் ஏறி உட்கார்ந்தால் ஐந்து நிமிடங்களில் போய்விடலாம். தாமதமாகப் போகக் கூடாது. இன்றைய ஃப்ளையிங்கில் ஒரு முக்கியமான மிஷன்.

"ஸீ யூ, ரீமா!" என்று முணுமுணுத்துவிட்டு அவன் பதிலுக்குக் காத்திராமல்

அறையை விட்டு வெளியே ஓடினான் அவன்.

சாதாரணமாக ஒரே உதையில் ஸ்டார்ட் ஆகும் பைக் இப்போது நான்கைந்து உதைகளுக்கு அப்புறமும் உயிர் பெற மறுத்தது.

ரீமா வெளியே வந்து அவனுடைய பொறுமையற்ற உதைப்புக்களை வேடிக்கை பார்த்துச் சிரித்தாள்.

''என் மேலே உள்ள கோபத்தை அது கிட்டக் காட்டினா எப்படி?''

புல்லெட் திடீரென்று உறுமியது. கணப்போதில் ஏறி உட்கார்ந்து புயலாய்க் கிளப்பிக்கொண்டு போனான் அவன். ரீமா கையை ஆட்டி டாட்டா காட்டியதைக் கவனிக்க நேரம் இல்லை.

கமாண்டிங் ஆபீஸர் நிச்சயம் திட்டப் போகிறார். லேட்டாக வரும் பைலட்களை அவருக்குப் பிடிக்காது.

தொலைவில் பிளேன்களை டெஸ்ட் செய்யும் எஞ்சின் சப்தம் கேட்டது. ப்ளூ ஃபார்மேஷன் தயார்ப்படுத்தப்படுகிறது.

அவன்தான் ஃபார்மேஷன் லீடர். முதல் ப்ளேனில் போக வேண்டியவன். பெயர் ஃப்ளைட் லெஃப்டினெண்ட் ரவி.

**கா**லை நிலையைப் பற்றியும், மேகங்களின் அளவைப் பற்றியும் ஸ்லைட் போட்டுக் காட்டி விளக்கிக் கொண்டிருந்த மெட்டியரலாஜிகல் ஆபீசரின் பேச்சு காதிலேயே விழாமல் மரம் போல் உட்கார்ந்திருந்தான் எட்வர்ட்.

ரவி ஏன் இன்னும் வரக் காணோம்?

ஃப்ளையிங் ஆபீஸர் எட்வர்ட் ப்ளூ ஃபார்மேஷனில் நெம்பர் டூ.

வழக்கமாகக் காணப்படும் உற்சாகம் அவனை விட்டுப் போயிருந்தது. நினைவெல்லாம் இரவு நடந்த சம்பவத்தையே சுற்றிச் சுற்றி வந்தது.

ரூபா மனத்தில் என்னதான் நினைத்துக் கொண்டிருக்கிறாள்? எவ்வளவு தைரியம் இருந்தால் எல்லோர் முன்னிலும் அப்படி அவமானப்படுத்தி யிருப்பாள்!

''ஐ டோண்ட் லவ் யூ, மிஸ்டர்!''

அவன்: உங்க சரக்கு மாஸ்டருக்கு ஞாபக மறதி அதிகமா?
சர்வர்: ஏன்?
அவன்: இட்லிக்குத் துளை போட்டிருக்கார்! வடைக்குத் துளை போடக் காணோமே!

—உ. ராஜாஜி



இத்தனை நாட்களும் காதலிப்பது மாதிரி பழகியதெல்லாம் இப்படி அவமானப் படுத்துவதற்குத்தானா? காத்திருந்து பழி வாங்கி விட்டாள். அவன் மூக்கை உடைக்க வேண்டும் என்றே கங்கணம் கட்டிக்கொண்டிருந்தவள் போல் என்ன பேச்சுப் பேசி விட்டாள்!

''நீங்களாகப் பாவித்துக் கொண்ட ஒன்றுக்கு நான் எப்படிப் பொறுப்பாக முடியும், எட்வர்ட்? வெறுமே நட்புடன் பழகினால் அதை அசட்டுத்தனமாகக் காதல் என்று எடுத்துக்கொள்வீர்களானால், ஐ ஆம் வெரி ஸாரி!''

இப்போது நினைத்துப் பார்க்கும்போதுகூட அவன் முகம் சிவந்து போனது.

ரவி வந்து இருளில் தட்டுத் தடுமாறிக் கொண்டு எட்வர்டின் பக்கத்துச் சீட்டில் அமர்ந்தான்.

''ஹலோ தேர், குட்மார்னிங்'' என்று எட்வர்டின் காதில் கிசுகிசுத்தான் ரவி.

''குட் மார்னிங் ரவி.''

''காலநிலையில் ஏதாவது கோளாறு இல்லையே?''

''ஸாரி, நான் கவனித்துக் கேட்கவில்லை. மேலே போனதுக்கப்புறம் நாமே பார்த்துக்கொள்ள வேண்டியதுதான்!''

''கொயட்!'' என்று கமாண்டிங் ஆபீஸரின் உறுமல் கேட்டது.

ப்ரீஃபிங் முடிந்ததும் இருவரும் சேர்ந்தாற்போல் அறையை விட்டுவெளியே வந்தார்கள்.

''ஏன் ரவி லேட்? பாஸ் திட்டப் போகிறார்.''

''வாங்கிக் கொள்ள வேண்டியதுதான். ப்ரேக் ஃபாஸ்ட் கூடச் சாப்பிடாமல் வந்திருக்கிறேன். பாஸ்தான் தருவாரே.''

''நேற்றைய பார்ட்டி ஒரு நான்ஸென்ஸ்.''

''அதனால்தான் லேட்.''

''ரூபாவைப் பற்றி என்ன நினைக்கிறாய் ரவி?''

''எப்படி நீ அவள் வலையில் விழுந்தாய் என்று நான் பலமுறை எண்ணி ஆச்சரியப் பட்டிருக்கிறேன்.''

''கரெக்டாகச் சொன்னாய். எனக்கு மனசே சரியில்லை. எப்படி ஃப்ளை பண்ணப் போகிறேன் என்று தயக்கமாக இருக்கிறது.''

''கல்யாணத்துக்கு முன்னமேயே உனக்கு மனக் கஷ்டம். எனக்கு அதற்கப்புறம் கஷ்டம். இரண்டு பேரும் ஜோடியாக ஃபார்மேஷனுக்குப் போகப் போகிறோம்.''

அவர்களுடைய அறைக்குப் போனதுமே இண்டர்காம் ஒலித்தது. கமாண்டிங் ஆபீஸரின் கட்டைக் குரல் கேட்டது.

''ரவி... கம் அண்ட் ஸீ மீ இன் மை ஆபீஸ்.''

**கா**ர்போரல் குமார் தான் பழுது பார்த்துக் கொண்டிருந்த ஹெல்மெட்டை டேபிள் மேல் வைத்து விட்டு அண்ணாந்து கொட்டாவி விட்டான்.

காலை மூன்றரை மணிக்கே படுக்கையை விட்டு எழுந்தது; தூக்கம் கண் இமைகளை அழுத்தியது. எல்லாம் இந்தப் பாழாய்ப் போன ஹெல்மெட்டால். அதில் பொருத்தப் பட்டிருந்த ஹெட்செட் சரியில்லை என்று நேற்று மாலை கம்ப்ளெயின்ட். ஃப்ளையிங்

ஆபீசர் எட்வர்டுடையது. இன்று காலை ஆறரைக்குள் சரிப்படுத்தி விட வேண்டும் என்று உத்தரவு.

சரிசெய்து முடித்தாயிற்று. நிம்மதி. சூடாக ஒரு கப் டீ குடித்தால் தேவலாம். கான்டீனுக்குப் போய் வந்தால் என்ன?

அவன்போய் ஐந்து நிமிடங்களுக்குஅப்புறம் சார்ஜெண்ட் மோகன் கையில் ஒரு ஹெல் மெட்டுடன் அறைக்குள் நுழைந்தார்.

'எங்கே போய் விட்டான் இவன்? இந்தச் சனியனை உடனடியாக ரிப்போர் செய்தாக வேண்டுமே!' என்று வெளிப்படையாக முணு முணுத்தார்.

சர்வீஸ் செய்து வைத்திருக்கும் ஹெட் செட் கண்களில் பட்டது.

'சரி, இப்போதைக்கு அதை எடுத்துக் கொண்டு இதை வைத்துவிட்டுப் போகலாம்' என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டார். சொல்லாமல் எடுத்துப் போவது தவறு என்று தோன்றிய நெருடலை, அப்புறம் குமாரைப் பார்த்துச் சொல்லிச் சமாதானப் படுத்திக் கொள்ளலாம் என்ற எண்ணம் அழித்து விட்டது.

மணி ஆறு ஐம்பது.

எட்வர்ட் ஹெல்மெட்டை எடுக்க வந்தான். அறையில் யாரும் இல்லை. சரிப் படுத்தப்பட்டவை என்று எழுதப்பட்ட போர்டின் கீழே வைக்கப் பட்டிருந்த ஹெல் மெட்டைக் கையில் எடுத்துக் கொண்டு அவசரமாகப் பிளேனை நோக்கி நடந்தான்.

சார்ஜெண்ட் மோகன், குமாரை எல்லா இடத்திலும் தேடிவிட்டு, கடைசியாக கான் டீனில் கண்டு பிடித்து விஷயத்தைச் சொன்ன போது மணி ஏழு.

ப்ளூஃபார்மேஷன் தரையை விட்டு மேலே எழும்பிக் கொண்டிருந்தது.

• • •

இரண்டு பிளேன்களும் மேலே போய்க் கொஞ்ச நேரத்துக்கப்புறம் ரேடியோ தொடர்பை விட்டு அகன்றதும், ஹெட் செட்டைக் கழற்றி வைத்து விட்டு நாற் காலியில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டார் கோயல். திரும்பவும் அவை ரேடியோ காண்டாக்டில் வருவதற்கு இன்னும் அரை மணி நேரத்திற்கு மேல் ஆகும்.

பாக்கெட்டிலிருந்து சிகரெட் பேக்கை எடுத்து ஒன்றை உருவி வாயில் வைத்துக் கொண்டபோது டெலிபோன் மணி அடித் தது.

''கோயல் ஹியர்.''

''ஃபார்மேஷன் ஆபரேடிங் நார்மல்?''— கமாண்டிங் ஆஃபீஸர்.

''குட் மார்னிங் சார். நார்மல் சார்.''

''குட். அவை திரும்பி வரும்போது எனக் குத் தெரிவிக்க வேண்டும்.''

''ஷ்யூர் சார்.''

ரிசீவரை வைத்து விட்டு சிகரெட்டைப் பற்றவைத்துக் கொண்டு ஒரு இழுப்பு இழுத்து விட்டார். சுகமாக இருந்தது.

மீண்டும் டெலிபோன்.

''இஸ் இட் ஏர் டிராஃபிக் கண்ட்ரோல்? யார் பேசுவது?''



டாக்டர்: உங்க கணவருக்கு எப்படித் திடீரென்று 'ஹார்ட் அட்டாக்' வந்தது?
மனைவி: 'நேத்து ராத்திரி யம்மா'ன்னு பாடும்போது கொஞ்சம் மூச்சை அதிகமாப் பிடிச்சுட்டார்! அதனாலேதான்!
—எஸ். பானுமதி

''டியூட்டி கண்ட்ரோல் ஆபீஸர்.''

''நான் பைலட் ஆபீஸர் பிரேம் சந்த் பேசுகிறேன். குட் மார்னிங்.''

''குட் மார்னிங்''

''ப்ளூ டூவில் ஏதும் அசாதாரணமாக இருந் தது தெரிந்ததா?''

''இல்லையே, ஏன்?''

''நான் பார்த்தபோது பெட்ரோல் லீக் காகிற மாதிரி பட்டது. நீங்கள் கவனிக்க வில்லையா?''

''ஊஹூம், ஆர் யூ ஷ்யூர்?''

''இப்படிக் கேட்டால் எப்படி? ஒரு சந் தேகம்தான்.''

''நீங்களாக யூகித்துக் கொண்டிருப்பீர்கள். அது வெறும் ஸ்மோக்காக இருக்கும்.''

''இருக்கும். எதற்கும் உங்களிடம் ஒரு வார்த்தை சொல்லலாமே என்றுதான்....''

''தாங்க்யூ. நீங்கள் கவலையே பட வேண் டாம். அப்படி யொன்றும் இருக்காது.''

ரிசீவரை வைத்தபோது கோயலுக்கு வியர்த்தது. இது என்ன வம்பு? அப்படி ஏதாவது இருக்குமானால் தொந்தரவாகி விடும். இப்போது என்ன செய்வது? சீனி யர் கண்ட்ரோலருக்குப் போன் பண்ணி அறிவுரை கேட்கலாமா?

அசட்டுத்தனமாக எதுவும் செய்து வம்பில் மாட்டிக் கொள்ளாதே என்று உள்ளுணர்வு உணர்த்தியது.

இப்படி நம்மைத் தனியே டியூட்டியில் போட்டு விட்டார்களே என்ற எரிச்சல் ஏற் பட்டது. இன்னொருவரும் கூட இருந் தால் இந்த மாதிரி சமயத்தில் ஒத் தாசையாக இருக்கும்.

ஒன்றும் ஆகக் கூடாது. கடவுளே, என் னுடைய டியூட்டியில் ஒன்றும் ஆகக்கூடாது. ப்ளூ ஃபார்மேஷன் பத்திரமாகத் திரும்பி வரவேண்டும்.

குழம்பிய மனத்துடன் ரேடியோ ரிசீவரை உறுத்துப் பார்த்துக் கொண்டு உட்கார்ந் திருந்தார் அவர்.

காத்திருப்போம். எல்லாம் நல்லபடியே நடக்கும், நடக்க வேண்டும்,

சார்ஜெண்ட் மோகன் திகைத்துப்போய் மரமாக நின்றார்.

பெரிய தவறு நடந்து விட்டது. குமாரிடம் ஒரு வார்த்தை கேட்காமல் ஹெல்மெட்டை எடுத்திருக்கக் கூடாது. இப்போது வெளியே சொன்னாலும் ஆபத்து. சொல்லாவிட்டாலும் ஆபத்து.

''குமார்....?''

''யெஸ் சார்ஜ்.''

''இப்பொழுது என்ன செய்வது?''

''செய்வதற்கு என்ன இருக்கிறது? உடனடியாக நான் என்ஜினீயரிங் ஆபீசரிடம் ரிப்போர்ட் செய்தாக வேண்டும்.''

''அவசரப்படாதே. அப்படி நீ ரிப்போர்ட் செய்வாயானால் என்னுடைய நிலைமை என்ன ஆகும் என்று யோசித்துப் பார்.''

''உங்களுடைய நிலைமையைப் பற்றிக் கவலைப்பட்டால் என்னை யார் காப்பாற்று

''இருக்கிற ஆட்டத்திலேயே கண்ணுக்கு நேராப் பொய் சொல்ற ஆட்டம் கிரிக்கெட்தாண்டா!''

''ஏண்டா அப்படிச் சொல்றே?''

''கையிலே பந்தை வச்சுக்கிட்டே 'நோ பால்; நோ பால்'ன்னு புளுகுறாங்களே!''

—அ. வசந்தா



வார்கள்? பின்னால் தவறு கண்டுபிடிக்கப் படும்போது 'நீ ஏன் உடனடியாக ரிப்போர்ட் செய்யவில்லை' என்று பழி என்மேல் விழாதா?''

''இரண்டு பேருக்கும் பாதகம் வராமல் இருக்க என்ன செய்யலாம் என்று யோசிப்போம்.''

''நோ, நான் ரிப்போர்ட் செய்யத்தான் போகிறேன்.''

''சரி, உன் இஷ்டம். நான்தான் மாற்றி வைத்தேன் என்பதற்குச் சாட்சி யார்? நீயே பார்க்கவில்லை. டியூட்டியை விட்டுக் காண்டீனுக்குப் போனது உன் தப்பு. அதற்கு என்ன பதில் சொல்வாய்? என்மேல் பழி வராமல் எல்லாவற்றையும் உன் மேல் திருப்பி விட எத்தனை நாழி ஆகும்?''

குமாருக்கு வாயடைத்துப் போனது. பலியாடு போல் விழித்தான்.

''குமார், நான் சொல்வதைச் சொல்லி விட்டேன். புத்திசாலித்தனமாக நடந்து கொள்.''

மோகன் திரும்பி நடந்தார். குமாரின் வாயை அடைத்து விட்டோம் என்ற நம்பிக்கையில் நடையில் திமிர் இருந்தது.

''சார்ஜ்... என்னைக் காட்டிக் கொடுத்து விட மாட்டீர்களே....?''

''வாயை மூடிக் கொண்டு பேசாமல் இருப்பாயானால் உன் மேல் எந்தப் பழியும் வராது. அதை நான் பார்த்துக் கொள்கிறேன்.''

எந்த விதமான கம்ப்ளெயிண்டும் இல்லாமல் விமானம் தரைக்கு வந்து சேருமானால் யாருக்குமே பிரச்னை இல்லை. ஹெட் செட் சரியில்லை என்பதற்காக ஒன்றும் விபத்து ஏற்பட்டு விடாது.

குமார் நம்பிக்கையுடன் காத்திருந்தான். ஃபார்மேஷன் திரும்பி வந்து விடும். வீணாக ஏன் கவலைப்பட்டு மனத்தைக் குழப்பிக் கொள்ள வேண்டும்? ஒன்றும் ஆகாது. அவன் மீண்டும் காண்டீன் இருந்த திசையை நோக்கி நடந்தான்.

• • •

அவ்வளவு அலட்சியமாக நாம் நடந்து கொண்டிருக்கக் கூடாது என்று தன்னையே நொந்து கொண்டாள் ரிமா. சீக்கிரம் எழுந்து ஒரு டீயாவது போட்டுக் கொடுத்திருக்கலாம். பாவம், வெறும் வயிற்றோடு மேலே பறந்து கொண்டிருப்பார்.

நினைக்க நினைக்க அவளுடைய தவறு அவளுக்கே பெரிதாகத் தெரிந்தது. ஏன் அப்படி நடந்து கொண்டோம்? மேலே பறக்கும் தொழிலில் இருப்பவனுக்கு மன நிம்மதி மிகமிக அவசியம். அப்படிப்பட்டவனுக்கு மனைவியாக இருப்பவள் அதைக் கெடுக்கும் வகையில் எந்தக் காரியமும் செய்யக் கூடாது.

டேபிள் மேல் தெரிந்த போட்டோவில் ரவி சிரித்துக் கொண்டிருந்தான்.

'என்னை மன்னித்துவிடுங்கள், ரவி. இனி மேல் இப்படி நடந்து கொள்ள மாட்டேன். டியூட்டி முடிந்து திரும்பி வாருங்கள். உங்களைச் சந்தோஷமாக வைத்துக் கொள்வதே என்னுடைய லட்சியம் என்கிற மாதிரி நடந்து கொள்கிறேனா இல்லையா பாருங்கள்.'

காலிங் பெல் ஒலித்தது.

யாராயிருக்க முடியும் இந்த வேளையில்?

ரிமா கதவைத் திறந்தாள். வெளியே ரூபா நிற்பதைப் பார்த்ததும் ஆச்சரியமாக இருந்தது.

''வா, ரூபா. என்ன இது, இவ்வளவு அதிகாலையில்?''

ரூபா பதில் பேசாமல் உள்ளே வந்தாள். டிராயிங் ரூமில் இருந்த சோபா ஒன்றில் உட்கார்ந்து கொண்டாள்.

''உங்களிடம் மன்னிப்புக் கேட்கத்தான் வந்தேன்.''

''மன்னிப்பா? என்னிடமா? எதற்கு?''

''நேற்று நான் பார்ட்டியில் நடந்து கொண்ட விதத்துக்கு.''

''ஓ... அதுவா? அதற்கு என்னிடம் ஏன் மன்னிப்பு கேட்க வேண்டும்?''

''எந்த முகத்தை வைத்துக் கொண்டு எட்வர்டிடம் போய்க் கேட்பேன்? அவர்

உங்கள் குடும்ப நண்பர். உங்களிடம் எவ்வளவு மதிப்பு வைத்திருக்கிறார் என்பதை நான் அறிவேன். அதனால்தான் உங்களிடம் மன்னிப்புக் கேட்கிறேன். என் சார்பில் அவரிடம் தெரிவிப்பீர்களா?''

''தாராளமாக. மாலையில் இங்கே வருவார். சொல்கிற விதத்தில் சொல்கிறேன். போதுமா?''

''தாங்க்ஸ். இதைச் சொல்லத்தான் இவ்வளவு அவசரமாக ஓடிவந்தேன்.'' ரூபா எழுந்து கொண்டாள்.

''உட்கார், ரூபா. என்ன அவசரம் அதற்குள்? சாப்பிட்டு விட்டுப் போகலாம்.''

''வீட்டில் சாப்பிட்டு விட்டுத்தான் புறப்பட்டேன். நான் வரட்டுமா? எட்வர்டின் கோபத்தைத் தணிப்பது உங்கள் பொறுப்பு. ஐ லவ் ஹிம். நேற்றிரவு அந்த மாதிரி நடந்து கொண்ட பின்தான் எனக்கே அது தெரிய வந்தது. ஐ வாஸ் ஜஸ்ட் ஸ்டுபிட்.''

''ஓ நோ. உன்னையறியாமல் செய்த தவறுக்கு நீ பொறுப்பாளியில்லை. எட்வர்ட் நான் சொன்னால் நிச்சயம் புரிந்து கொள்வார்.''

ரூபாவை அனுப்பி விட்டுக் கதவைச் சாத்திக்கொண்டு உள்ளே வந்தபோது ரிமாவுக்குச் சிரிப்பு வந்தது.

எல்லோருக்குமே காலம் தாழ்ந்துதான் தவறுகள் விளங்கும் போல் இருக்கிறது. இதோ நானில்லையா, ஒரு டீ கூடக் கொடுக்காமல் அலட்சியமாக இருந்து விட்டு இப்போது ரவியை நினைத்து உருகிக் கொண்டிருக்கிறேனே!

மணி ஏழு நாற்பது.

ஏழு முப்பத்தைந்துக்கெல்லாம் ரேடியோ கான்டாக்டில் வந்திருக்க வேண்டிய ப்ளூ ஃபார்மேஷன் இன்னும் காணோம்.

கோயல் கண்ட்ரோல் டவரில் வியர்த்துக் கொண்டிருந்தார்.

டெலிஃபோன் ஒலித்தது. கமாண்டிங் ஆபீஸர். ''இன் கான்டாக்ட்....?''

''நோ, சார்!''

''என்ன இன்னும் இல்லையா? செக் எகெய்ன்.''

கோயல் எல்லா சானலிலும் ஒரு முறை ப்ளூஃபார்மேஷனைக் கூப்பிட்டுப் பார்த்தார்.

''நோ கான்டாக்ட் சார்!''

''இம்பாஸிபிள்! முயற்சி செய்யுங்கள். நான் இதோ புறப்பட்டு அங்கு வருகிறேன்.''

போயிற்று. எல்லாம் போயிற்று. அதிர்ஷ்டம் நம்மைக் கை விட்டு விட்டது. என்ன ஆயிற்று ப்ளூவுக்கு? ஏன் இன்னும் கான்டாக்ட் செய்யவில்லை?

கோயல் ராடார் கண்ட்ரோலுக்கு போன் செய்து ஏதும் தெரிகிறதா என்று கேட்டார், இல்லை என்று பதில் வந்தது.

கைகள் நடுங்க போனை எடுத்து சீனியர் கண்ட்ரோலருக்கு விஷயத்தைத் தெரிவித்தார் கோயல்.

மணி ஏழு ஐம்பது. ட்யூ டைம். ப்ளூ... திரும்பி வா.கோயலைக் காப்பாற்று.

ப்ளூ ஃபார்மேஷன் திரும்பத் தரைக்கு வரவேயில்லை. வான வீதியிலே மோதி விபத்துக்குள்ளாகி.-. எதனால் எப்படி நிகழ்ந்தது என்பது புரியாத புதிர். எத்தனையோ காரணங்கள். எதை என்று குறிப்பிட்டுச் சொல்வது? சொல்லக் கூடியவர்கள் திரும்பவில்லை.

அப்புறமாக நடக்கப் போகும் என் கொயரியில் தெரிய வருமா?



இசை உலகில் ஓர் அற்புதமாக விளங்கும் 12 வயதுச் சிறுவன் யு. சீனிவாசன் மாண்டலின் வாத்தியத்தைக் கையாண்டு பெரும் புகழ் பெற்று வருகிறான். அண்மையில் குடந்தை நகரில் ஒரு திருமண வரவேற்பில் இவனுக்குப் பக்க வாத்தியங்கள்: சிக்கல் பாஸ்கரன்- வயலின்; தஞ்சாவூர் உபேந்திரன்— மிருதங்கம்; வலங்கைமான் சண்முகசுந்தரம் — தவில்; விநாயகராம் — கடம்!

பாலகனின் இசை மழை அனைவர் உள்ளத்தையும் கவர்ந்தது. தனி ஆவர்த்தனத்துக்குப் பிறகு திருமண வீட்டார் ராகம் தானம் பல்லவி வாசிக்கக் கோரினர். இரவு மணி 9—30 ஆகிவிட்ட போதிலும் சீனிவாசன் தோடியில் ராகம் தானமும் பிறகு ஸ்வர ராக மாலிகையுடன்கூடிய பல்லவியும் வாசித்தான்.

இதன் பிறகு திருமண வீட்டார், ''நாங்கள் கோருவது சங்கராபரணம் திரைப்படத்திலே பாடப்பட்ட ராகம்—தானம் — பல்லவி என்ற பாடல்'' என்று விளக்கியபோது சிறுவன் முகத்தில் ஏற்பட்ட விரக்தியைப் பார்க்க வேண்டுமே! பின்புறத்தே இருந்த தந்தையையும் பக்க வாத்தியக்காரர்களையும் பரிதாபமாகப் பார்த்தான்.

'தயவு செய்து என்னைச் சினிமாப் பாடல்களுக்குஅடிமைப்படுத்தாதீர்கள்' என்பது போலிருந்தது அந்தப்பார்வை.

பிறகு சஞ்சலத்தை ஒதுக்கி அதையும் வாசித்துக் காட்டினான். என் மனம் உருகிப் போயிற்று.

—துரோணன்




## அத்தியாயம் 32

அடியாட்கள் பழக்கப்பட்டவர்கள். அசந்து கிடந்த தங்கள் வியூகத்தைப் பலப் படுத்திக் கல்லெறிந்தவர்களை ஓட ஓட விரட்டினார்கள். சைக்கிள் செயினும் மீன் வாளும் சகல இக்கும் பாய்ந்தன. விஸ்வ நாதனைத் தாக்கியவர்கள் கோர்ட் பக்கம் ஓடினார்கள். மோட்டார் சைக்கிள் ஒன்று சட்டென்று கிளம்பி ரிஸர்வ் பாங்க் சரிவுப் பாலத்தில் இறங்கிற்று. பதுங்கிற்று.

விஸ்வநாதன் துவண்டான். துடித்தான். கார் துடைக்கும் துணியை எடுத்துத் தோளைப் பொத்திக் கொண்டான். உதடு விளிம்பில் சூடாய் ரத்தம் பொங்கிக் கசிந்தது.

''இவனென்ன பேயரசன் குதிரை வெறியன்''... கவிதை சம்பந்தமில்லாமல் மனசில் ஓடிற்று. அடியாள் ஒருவன் ஓடிவந்தான்.



பாலகுமாரன்

தோலைச் சோதித்து ஜிப்பாவைக் கிழித்து ஒற்றினான். கார் உள்ளேயிருந்து தண்ணீர் பாட்டில் எடுத்துக் காயத்தில் ஊற்றினான். ''தோல் கிளிஞ்சிடுச்சு துரை. ஆட்டோ புடிச்சாரேன். நேரா ஜெனரல் ஆஸ்பத்திரி போ.''

''வேணும் டாஷ் போர்ட்ல ஒரு சிலுவைப் பெட்டி இருக்கும். அதை எடு.''

''டிஞ்சரா? இது பகபகன்னு எரியுமே சார்.''

''பரவாயில்லே. காயத்திலே ஊத்து. திருப்பியும் வருவானுங்களா?''

''தெரியலே. எத்தினி வண்டி போயிருக்கு.''

''இருபது வண்டி.''

''வுட்றுலாம் தொரை. போலீசு வந்தா நாங்க மாட்டிக்குவம்.''

''சரி. உள்ள போய் எங்காளுங்களைக் கூப்பிடு. லாரி உள்ள போகாம மடக்கித் திருப்பிடு.''

''டிஞ்சரு ஊத்தினா எரியும். தாக்குப் புடிப்பியா?''

''ஊத்துய்யா.''

விஸ்வநாதன் உடலில் நெருப்பு இறங்கியது. பச்சை மரம் எரிகிற வாசனை கிளம்பிற்று. விஸ்வநாதன் பேயாய் அலறினான். பலம் கொண்ட மட்டும் கார் பானெட்டை அறைந்தான். இடக் கையால் முகத்தைப் பொத்திக் கொண்டு துடித்தான்.

குறுக்கும் நெடுக்குமாய் அலைந்தான்.

உள்ளே இருந்து குமாஸ்தாக்கள் ஓடி வந்தார்கள். ''அடிச்சுட்டானு... அடிச்சுட்டானு.'' காரில் அனைவரும் திணித்துக் கொள்ள ஒரு குமாஸ்தா வண்டியைக் கிளப்ப, கார் விருட்டென்று கிளம்பிற்று. ரிஸர்வ் பாங்க் வாசலில் வடிவேலு கையசைத்தான்.

''என்னங்க போறுமா? கிளம்பிட்டீங்க?''

''போறுது. எங்க நாலு பேர் முதுகிலேயும் நீயே போடு. என்னுய்யா வேலே இது. கத்தியால கிழிச்சிட்டான். இங்க உக்காந்து வேடிக்கை பார்க்கறியே...''

''விசு சார்... அடிச்சுட்டாங்களா?''

விசு பேச்சின்றித் துவண்டு கிடந்தான்.

''சார், பிரைவேட் டாக்டர்ட்டப் போங்க. கவர்ன்மெண்ட் ஆஸ்பத்திரி வேண்டாம்.''

குமாஸ்தா கோபத்துடன் வண்டியைக் கிளப்ப வடிவேலு அவசரமாய் ஒதுங்கினான்.

கார் அண்ணா சமாதியருகே கடந்தபோது அவர்களுக்குப் பழக்கப்பட்ட ஹார்ன் சப்தம் கேட்க சட்டென்று நிறுத்தப்பட்டது.

''என்ன ஆச்சு விஸ்வநாதன்?''

''எம். டி... எம். டி.'' — குமாஸ்தாக்கள் பரபரப்பாக இறங்கினார்கள். ''வணக்கம் சார். அவரை அடிச்சுட்டாங்க சார்.''

''விசு... விஸ்வநாதன்...'' எம். டி. விஸ்வநாதனை உலுக்கினார்.

விஸ்வநாதன் சரிந்தான்.

''யார் நீ... பர்ச்சேஸ் ரகுதானே... நேரே என் வீட்டுக்கு ஓட்டு. வேண்டாம். பிரபா

நர்ஸிங் ஹோம் போ. நான் பின்னாடி வரேன்.''

விடியல் நேரத்தில் நர்ஸிங் ஹோமிலிருந்து பல போன்கள் பேசப்பட்டன. கம்பெனியின் அதிகாரிகள் எழுப்பப்பட்டனர். நாலா பக்கமும் கார்கள் பறந்தன.

விஸ்வநாதன் தோளில் தையல் போடப்பட்டது. இடது முழங்கை வரை கட்டுப் போடப்பட்டது. முகவாயில், நெற்றியில், கண் விளிம்பில் ப்ளாஸ்டர் ஒட்டப்பட்டன. இடது கையைத் தூக்கிக் கட்டி முதுகைத் தூக்கிச் சாத்திப் படுக்கையில் கிடத்தப்பட்டான். தூக்கம் வர, வலி மறக்க ஊசி போடப்பட்டது. உடைகளை உருவி எடுத்துவிட்டு மார்புவரை வெள்ளைத் துணி போர்த்தப்பட்டது.

''அவுட் ஆஃப் டேன்ஜர். பயப்பட ஏதுமில்லை. நிம்மதியாய்த் தூங்கட்டும். தொந்தரவு செய்ய வேண்டாம். அசங்கக் கூடாது.''

விடிந்து குருவிகள் புலம்புகிறபோது தாரிணியைக் கார் அனுப்பி அழைத்துவந்தார்கள். சப்தம் போடாது இருக்கச் சொன்னார்கள்.

தாரிணி புடவைத் தலைப்பைச் சுருட்டி வாயைப் பொத்தி விம்மினாள்.

''ராஜா... என் ராஜய்யா...' 'என்று தேம்பியபடி கட்டில் விளிம்பில் சரிந்தாள்.

குமாஸ்தாக்கள் வேதனையுடன் முகத்தைத் திருப்பிக் கொண்டனர்.

எம். டி. அதிகம் புகை பிடித்தார். வேதனை தாளாது சுருட்டை நெரித்து அணைத்தார்.

கூலிகளுக்கு இரவே சந்தேகம் வந்துவிட்டது. வடிவேலு தவிர வேறு யாருக்கும் இப்படி வண்டி ஓட்டும் தைரியம் கிடையாது என்று தோன்றிற்று. நேரடியாய் இது பற்றிப் பேசவும் பயமாய் இருந்தது.

காந்திலால் தண்ணித் தொட்டித் தெருவில் சப்தம் போடுவது பார்த்துக் கூலி ஆட்கள் தெருவில் கூடினார்கள். காந்திலால் கூச்சலுக்கு எதிர்க் கூச்சல் வருமா என்று காத்திருந்தார்கள்.

''பெட்டிஷன் கொணாந்தீங்களேடா துட்டு கேட்டு. கைநாட்டுப் பசங்களா. ஒங்க வயத்துல அடிச்சுப்போட்டு வண்டி ஓட்டியிருக்கான் வடிவேலு... என்னடா செய்யப் போறீங்க?''

''த்தா பாரு சேட்டு. தெரியாத பேசாதே. மாவுக் கம்பெனி வண்டிதான் லோடு எடுத்தது.''

''மாவுக் கம்பெனி வண்டி ரெண்டிக் கூட்டம் கூட்டியாந்துதா... குப்பனைத் தலைல அடிச்சுத் தொரத்திச்சா? டேய்.... நான் பரம்பரைப் பணக்காரண்டா. லாரி ஓடாத போச்சுன்னு அடகு வியாபாரம் பண்ணுவேன். அது இல்லேன்னு துணி எடுத்தாந்து விப்பேன். பொறுக்கிப் பசங்களைக் கூப்பிட்டு வச்சு சோடா பாட்டில் ஒடைக்க மாட்டேன். பகல்ல வியாபாரம் பண்ணுவேண்டா. கூட்டிக் குடுக்கறவன், இருடறவன் ராத்திரி மப்ளர் கட்டிக்கினு பதுங்கிப் போவான்.''

''தலைவர் வண்டின்னு எப்படி சொல்றே?''

''தொடப்பக்கட்டை... ஒன்னைத் தொரத்தித் தொரத்தி அடிச்சானே அவன் கிட்டக் கேளு. காசிமேடுல போய் ராத்திரி யார் ஹார்பராண்டே சோடா பாட்டில் வுட்டதுன்னு கேளு. எவ்ளோ அட்வான்ஸ் வாங்கினான்னு கேளு. போ.''

''அடிச்சவன் ஒம்பேரு சொன்னா?''

''துணி போட்டுத் தாண்டறேன். ஒம் பேர்ல லாரி எழுதி வக்கிறேன். எல்லாத்தியும் வுட்டுட்டு ஊத்தி மூடிக்கினு போய்ட்றேன். நம்ம பேர் சொல்வானா எவனுக்கம்?''

''தலைவர்ட்டே கேக்கலாம்பா.''

''கடையே தொறக்கலியே.''

''மேலே ஐயர் இருப்பாரே. போய்க் கேளு. எப்ப தலைவர் வருவாருன்னு.''

தன் பெயர் பேசப்படுவது கேட்டு நாணு ஐயர் கீழிறங்கினார்.

''என்ன குப்பா... வடிவேலு எங்க... இன்னும் கடை தெறக்கல. மணி பத்தாறது....''

''அதான் ஒங்களைக் கேக்கலாம்னு நெனச்சோம் ஐயரே.''

''நாணு ஐயர், ஒரு விஷயம் பேசணும். உள்ற வாங்கோ.'' காந்திலால் அவரை உள்ளே அழைத்தான்.

''நேத்திக்கு நம்ம இங்கிலீஷ் கம்பெனி லோடு வடிவேலு எடுத்தாரா, தெரியுமா?''

''இங்கிலீஷ் கம்பெனி உன்னுதாச்சே... எப்படி எடுப்பான்.... வடிவேலு கிட்ட லாரி ஏது காந்திலால்?''

''எடுத்துருக்கான்.''

''தவறாப் பேசப்படாது.''

''இல்லே ஐயர். தெரிஞ்சுதான் பேசறேன். ராத்திரி ஹார்பர் கிட்ட பெரிய கலாட்டா. அடிதடி.''

''அப்புறம்?''

''விசு சாரை அடிச்சு நொறுக்கிட்டாங்க. ஆஸ்பத்திரில கெடக்கார்.''

''என்னது.... என்ன... விஸ்வநாதனையா? காயத்ரி.... அம்மா காயத்ரி....''

கட்சிக்காரர்: நீங்க கேஸை எடுத்துச் சொல்லும்போது ஜட்ஜ் தலையை இப்படியும் அப்படியும் ஆட்டிக் கிட்டே இருந்தாரே... நம்ம கேஸ் தோத்துடுமா?

வக்கீல்: அதை ஜட்ஜ் தலையாட்டறதைப் பார்த்துத்தான் தெரிஞ்சுக்கணுமா? எனக்கே தெரியாதா?

—சிவலட்சுமி



துணியின் அழுக்கும் போகவில்லை
கையின் அரிப்பும் தாளவில்லையா?...
அஞ்சவே வேண்டாம்!

புத்தம் புதிய சலவைக்கு பொங்கும்
நுரைவளம் கொண்ட

# கோபுரம்

சலவை சோப்பு



எல்லா **காதிகிராப்ட்** களிலும்,
கடைகளிலும் கிடைக்கும்



தமிழ்நாடு
கதர் கிராமத்
தொழில் வாரியம்
சென்னை-600 108

DIPR/509/83/ELEGANT

காந்திலால் வீட்டு வராந்தாவை விட்டு ஐயர் படி இறங்கினார். மேலே ஓடினார் மூச்சிரைக்க. நாணு ஐயர் பதற்றத்தை காந்திலால் குறித்துக் கொண்டான். வடிவேலுவை முற்றிலுமாய் ஒழிக்க இதுதான் சந்தர்ப்பம் என்று நினைத்துக் கொண்டான். கார் ஏறிக் காசிமேடு பக்கம் போனான்.

**கா**யத்ரி வாயைப்பொத்திக்கொண்டாள். பொத்தினதையும் மீறி 'ஐயோ' என்றாள்.

''காயத்ரி, இந்த விஷயத்துல நாம அதிகமாப் பதற்றப்படக் கூடாதுன்னு தோணறது. சட்டென்று உன்னைத் தேடி விஷயம் சொல்ல மேலே வந்தது கூடத் தப்போன்னு படறது.''

''எனக்குப் பாக்கணுமேப்பா.''

''எனக்கும்தாம்மா. ஆனா நாம ரெண்டு பேரும் போய்ப் பாத்தா நல்லதா? நாம இந்தக் காரியத்துக்கு உடந்தைன்னு தெரிஞ்சா சும்மா விடுவாளா?''

''எனக்கு வேலை போகும். பரவாயில்லப்பா.''

''நானும் இங்க இருக்க முடியாது.''

''கடையோ தொறக்கப் போறதில்ல. இங்க வெறுமனே உக்காந்திருக்கறதுக்கு அங்க போய்ப் பாத்தா என்ன? தூரத்து உறவுன்னு சொல்லி விருக்கோமே.''

தந்தையும் மகளும் புறப்பட்டார்கள். பஸ் பிடித்து, விஸ்வநாதன் ஆபீஸ் வாசலில் ஆஸ்பத்திரி விசாரித்து, மறுபடி பஸ் பிடித்து வியர்த்துத் தெருவில் வெகு தூரம் நடந்து கண்டுபிடித்தார்கள்.

தாரிணி கவலையுடன் விஸ்வநாதன் அருகில் உட்கார்ந்திருந்தாள். நாணு ஐயரைக் கண்டதும் எழுந்து வந்தாள்.

''மாமா...'' என்று கேவினாள்.

நாணு ஐயர் அவளை அணைத்துக் கொண்டார். கையோடு கொண்டு வந்த விபூதி குங்குமப் பொட்டலம் பிரித்து அவள் நெற்றியில் இட்டார்.

நகர்ந்து உள்ளே போய் கைக்குள் விபூதியை வைத்து நமச்சிவாய வாழ்க... என்று மெல்லப் பாடினார். 'மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு' என்று அவன் உச்சந் தலையில் தடவினார்.

காயத்ரி வாசலிலேயே நின்றாள். 'ஹலோ விஸ்வநாதன்' என்று மனசுக்குள்ளேயே முனகினாள். 'எழுந்திரு நண்பனே... எழுந்திரு... உனக்கு ஒன்றுமில்லை. எழுந்திரு. ஆயிரம் குதிரை வலுவுள்ளவன் நீ. உலகத்தின் வலியனைத்தும் உன்னால் தாங்க முடியும். எழுந்திரு. கண் விழி. மயக்கம் விடு. மலரச் சிரி. என் குரல் கேட்கிறதா விஸ்வநாதன்? நான் காயத்ரி. உன் சிநேகிதி பேசுவது கேட்கிறதா? உன் வலியை எனக்குக் கொடு. எழுந்திரு. மெல்ல எழுந்திரு.' தன் பார்வையைக் கூர்மையாக்கி அவன் நெற்றியில் பதித்தாள். அவன் புருவ மத்தியில் மனத்தைப் பதித்து வலியைப் பிரித்து எடுக்க முயற்சி செய்தாள். விஸ்வநாதன் முனகினான்.

''நீங்கதான் காயத்ரியா?'' பின்னால் தாரிணியின் குரல் கேட்டது. ''உங்களைப் பத்திச் சொல்லியிருக்கார். நான் தாரிணி. அவர் ஒய்ஃப்.''

''ஞாலத்துப் புத்திரனைப் பெற்றது நங்கையீர்
நானே மற்றொருமில்லை.''

கண்ணன் பற்றி யசோதை கர்வத்துடன் சொன்னது போல் தாரிணியின் பேச்சு காயத்ரிக்குப் பட்டது.

'நீ விஸ்வநாதன் மனைவி... ஸோ வாட்?'

''ஆபீஸ் ஆபீஸ்னு அலைஞ்சது எங்க கொண்டு விட்டிருக்கு பாருங்கோ. ஒண்ணு கெடக்க ஒண்ணு ஆச்சுன்னா என்கதி என்ன?''

''கவலைப்பட வேண்டாம். அவருக்கு ஒன்றும் ஆகாது.''

''ஆகலை, சரி. ஆயிருந்தா என் கதி என்ன? முதுகுல விழுந்த கத்திக் குத்து மார்ல விழுந்திருந்தா....''

''விழாது.''



''இன்னும் ஒரு மாசத்துக்கு உன் உயிருக்கு ஆபத்து ஒன்றும் இல்லை...''
''அதற்குப் பிறகு என்ன டாக்டர்?''
''அதற்குப் பிறகுதானே நான் உனக்கு ஆபரேஷன் செய்யப் போறேன்!'' —கீழை அ. கதிர்வேல்

''அதெப்படிச் சொல்ல முடியும்? ஏதோ பகவான் செயல்.''

''சொல்ல முடியும். எத்தனை ஹிம்சைப் பட்டாலும் தாண்டி வர சக்தி சிலபேருக்கு உண்டு. இருக்கட்டும். உங்களுக்கு நான் என்ன ஹெல்ப் பண்ண முடியும் இப்போ?''

''ஒண்ணுமில்லை. வந்ததே பெரிசு. மனசுக்கு ஆறுதல்.''

''உபசாரமே வேண்டாம். என்ன உதவி வேணும்? நான் என்ன செய்யணும்?''

''குழந்தைகளைத் தனியே விட்டுட்டு வந்திருக்கேன்.''

''நான் போய்க் கூட்டிண்டு வரவா?''

''பக்கத்து வீட்டுக்குப் போன் பண்ணிச் சொல்றேன். நீங்களும் உங்கப்பாவும் போய்..

**கா**யத்ரி குழந்தைகளை அணைத்துக்கொண்டாள். ஹாய் என்றாள். இரண்டும் கொஞ்சம் மலங்க விழித்தன. பிறகு சிரித்தன.

(தொடரும்)

உன்னதம் ரேகா உன் கைவண்ணம். உடுப்பிலே கறைபடிந்தால் என்ன?



"என்னோட
கவுனும்மா?
புதுசு போல
ஜொலிக்குதே"




**ஹை பவர் ஸர்ஃப் சலவை**
**ஒப்பற்ற வெள்ளைவெளேர்–**
**இது வெட்டவெளிச்சம்!**

**வெள்ளைத் துணிகளுக்கும் பலே,**
**வண்ணத் துணிகளுக்கும் பலே!**

# அமைச்சரின் திடீர் விஜயம்!

**திண்டிவனம் அரசு ஆஸ்பத்திரிக்குத் திடீரென்று விஜயம் செய்த தமிழக மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் டாக்டர் ஹண்டேயுடன் சென்ற நமது நிருபர், அங்கு நடந்தவைகளை விவரிக்கிறார்**

பாண்டிச்சேரியை நோக்கிச் செல்ல வேண்டிய அமைச்சரின் கார் திண்டிவனம் நகருக்குள் நுழைந்ததும், பிரதான சாலையில் செல்லாமல், சந்துகளில் திரும்பி, திண்டிவனம் தாலுகா அரசு ஆஸ்பத்திரி முன்னர் போய் நிற்கிறது. கூட வந்த பாதுகாப்பாளர், உதவியாளர், கடலூர் தொகுதி எம்.எல்.ஏ. மற்றும் எல்லோருக்கும் ஆச்சரியம்.

ஆனால் கார் சத்தத்தைக் கேட்ட டாக்டர்களுக்கோ அதிர்ச்சி. யாரையும் எதிர்பாராமல் உள்ளே நுழைகிறார் ஹண்டே. முதலில் அவர் கண்ணில் படுபவர் கண்ணன் என்பவர். ஒரு சிறிய பொட்டலத்தில் மாத்திரைகளை வைத்துக் கொண்டிருக்கிறார் கண்ணன். அதை வாங்கிப் பார்க்கிறார் அமைச்சர். மருந்து எழுதித் தரும் சீட்டிலேயே மாத்திரைகள் மடித்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதற்குள் ஓடோடிவந்து அமைச்சரை வரவேற்கிறார்கள் டியூட்டியில் இருக்கும் டாக்டர்கள். பிறகு நேராக மாத்திரைகள் கொடுக்கும் பகுதிக்குச் சென்றார் ஹண்டே. "ஏன் கவரில் போட்டுக் கொடுக்கவில்லை? கவர் இல்லையென்றால் மாவட்ட மருத்துவ அதிகாரியிடம் சொல்லி வாங்கிக் கொள்ள வேண்டியதுதானே?" என்று டாக்டர்களிடம் சொல்கிறார். பிறகு தலையில் கட்டியுடன் நின்ற கலா என்ற சிறுமியைப் பார்த்து, 'எவ்வளவு நாளா ஆஸ்பத்திரிக்கு வருகிறாய்?' என்கிறார். "இன்றுதான் வருகிறேன்" என்கிறாள் கலா. பிறகு அமைச்சர் செல்வது டாக்டர்கள் அமர்ந்திருக்கும் அறைக்கு. அங்கு மேஜையின் மேல் வைக்கப்பட்டிருந்த பி. பி. கருவியைப் பார்த்து 'எப்படி வேலை செய்கிறது? இது இந்தியத் தயாரிப்பு ஆயிற்றே?' என்றவுடன் 'நன்றாக வேலை செய்கிறது' என்கின்றனர் டாக்டர்கள். ஒரு நாளைக்கு எவ்வளவு பேர்கள் வெளி நோயாளியாக வந்து சிகிச்சை பெறுகிறார்கள்? ஊசிகள் போதிய அளவு உள்ளதா? மருந்துகளின் ஸ்டாக் என்ன? முனிசிபாலிடி சுகாதார அதிகாரி ஆஸ்பத்திரிக்கு வருகிறாரா? போன்ற பல கேள்விகளை டாக்டர்களிடம் கேட்டுவிட்டு ஆண் நோயாளிகள் தங்கியிருக்கும் பகுதிக்குச் செல்லு முன் கண் சிகிச்சைப் பிரிவுக்கும் ஊசி போடும் இடத்துக்கும் சென்று பார்க்கிறார். அனைவரும் வரிசையாக நின்று ஊசி போட்டுக் கொள்வதைப் பார்த்தவுடன், "நான் வந்ததால் இப்படியா அல்லது எப்போதும் இப்படியா?" என்று கேட்டுச் சிரிக்கிறார்.

ஆண்கள் வார்டுக்கு வந்தவர் சில படுக்கைகள் காலியாக இருப்பதைப் பார்த்துக் கேள்விகள் கேட்க, டாக்டர்கள் மௌனம் சாதிக்க, "நாம் நன்றாகக் கவனித்து அனுப்பினால் மக்கள் வருவார்கள்" என்கிறார்.

அமைச்சரைப் பார்த்தவுடன் சுப்பராயன் என்ற நோயாளி கஷ்டப்பட்டு எழுந்து நோயை விளக்குகிறார். "ரத்தம், சிறுநீர் சோதனை செய்து விட்டார்களா?" என்று கேட்டு கேஸ் ஷீட்டை வாங்கிப் பார்க்கிறார். பிறகு அந்த வார்டில் இருக்கும் அனைவரையும் விசாரிக்கிறார். சில நோயாளிகள் "நாலு நாள் ஆச்சு சார், ஒண்ணுமே செய்யலே" என்கின்றனர். அதையும் அமைச்சர் கேட்டுக் கொள்கிறார். "கலோரி மீட்டர் என்ற கருவி இல்லை" என்று டாக்டர்கள் தெரிவிக்கிறார்கள். "அதை வாங்குவதற்கு

○ டாக்டர்களுக்கு அறிவுரை





"மருந்துகளைக் கவரில் போட்டுக் கொடுங்கள்!"



சிறுமி கலாவை விசாரிக்கிறார்

உடனே ஆவன செய்யுங்கள்'' என்று டாக்டர்களிடம் சொல்கிறார்.

திண்டிவனம் தாலுகா ஆஸ்பத்திரி கிட்டத்தட்ட ஒரு லட்சம் மக்களுக்கு மருத்துவ வசதி அளிக்கும் ஓர் ஆஸ்பத்திரி. தொத்து நோய்கள் வார்டு இருந்தாலும் உபயோகத்தில் இல்லை. ரத்த வங்கி செயல்படாமலே இருக்கிறது.

மருத்துவ மனையை ஒரு சுற்றுச் சுற்றி வந்துவிட்டு அமருகிறார் ஹண்டே. டாக்டர்களை நோக்கிக்கேள்விக்கணைகள் பிறக்கின்றன.

''இந்தத் தாலுக்காவின் பிறப்பு, இறப்பு விகிதம் என்ன? குழந்தைகள் சாவு விகிதம் என்ன?''

''ரத்தம் கொடுப்பவர்கள் லிஸ்ட் இருக்கிறதா? தாலுக்கா வரைபடம் எங்கே?''

''லேப்ராஸ்கோப் அறுவைச் சிகிச்சை முகாம் நடந்ததா?''

''இந்தப் பகுதியில் விபத்தில் இறந்து போனவர்கள் எவ்வளவு பேர்?''

''வயிற்றுப் போக்காலும், உடலில் நீர் வற்றுவதாலும் வரும் 'காஸ்ட்ரோ என்டரைடீஸ்' என்ற நோயால் பாதிக்கப்படும் குழந்தைகள் எவ்வளவு?''

பெரும்பாலான கேள்விகளுக்கு டாக்டர்களிடமிருந்து பதிலாக வருவது மௌனமே.

ஹண்டே தொடர்கிறார். ''இங்கு வந்து குறை கண்டு பிடிப்பது எனது நோக்கமல்ல. ஒரு தாலுக்கா ஆஸ்பத்திரியில் பணிபுரிபவர்கள் இந்த மாதிரியான விவரங்களைத் தெரிந்து வைத்துக் கொள்ள வேண்டும். குடும்பக் கட்டுப்பாடு அறுவைச் சிகிச்சை முகாம் நடத்துவதற்கு ரோடரி, லயன் கிளப் போன்ற சங்கங்களை அணுக வேண்டும். நாம் மருந்து கொடுத்து சிகிச்சை செய்வதில் பாதி தான் குணமாகும். மீதி நாம் பேசுகிற கனிவான பேச்சாலும், புன்சிரிப்பாலும் சரியாகும். நீங்கள் இன்னும் சிறப்பாக உழைத்துச் சுகாதாரத் துறைக்குப் பெருமை சேர்க்க வேண்டும்.''

இதற்குள் ஆஸ்பத்திரிக்கு அமைச்சர் வந்திருக்கும் விஷயத்தைக் கேள்விப்பட்ட நகர முக்கியஸ்தர்கள் வருகிறார்கள். குறைகளைக் கூறுகிறார்கள். ஆவன செய்வதாக வாக்களிக்கிறார். டாக்டர்களை நோக்கி, ''அடுத்த முறை நான் வரும்போது கொஞ்சமாவது முன்னேற்றம் இருக்க வேண்டும்'' என்று கூறி விடை பெறுகிறார்.

படங்கள்: சுபா

விபத்தில் அடிபட்ட நோயாளியை விசாரிக்கிறார்.



"மருந்துகளைக் காண்பியுங்கள்."



| மேஜரின் பார்வையில்... | எங்கள் பார்வையில்... |
|---|---|

## மேஜரின் பார்வையில்...

ஜெயில். பின்னணியில் இளையராஜாவின் திடும் திடும். தூக்குமேடை தயாராகிவிட்டதைச் சரிபார்க்கிற அதிகாரி. காட்சியை வெட்டிக்கம்பிகளுக்குப் பின்னால் சாவை எதிர்கொள்ளக் காத்திருக்கும் தாடி வளர்ந்த கைதி.

ஃப்ளாஷ் பாக்: கட்சி கட்சி என்று அலைகிற ஜெய்சங்கர். உடன் பிறவாத் தம்பி சிவகுமார். பெற்றோர்.

மனைவிக்கு எந்த இன்பமும் தராமல் கட்சியிலும் தேர்தலிலும் அடிபட்டு, குடித்து குடல் வெந்து, ரத்தம் கக்கிச் சாகிற பாத்திரம் ஜெய் சங்கருக்கு.

பெற்ற குழந்தையைப் பகிர்ந்துகொள்ளும் அதே சமயம் தாம்பத்தியத்திலும் பங்கு கேட்க வந்துவிட்ட பாப்பாத்தியின் பேரில் பொங்கிப் பாய்கிற 'வள்ளி'யாய் சுலக்ஷணா.

அப்பன் பெயர் சொல்ல முடியாத பரிதாபப் பெண்ணாய் லக்ஷ்மி. கட்சிப் பணிக்குக் கணவன் கிளம்புகிற ஒவ்வொரு முறையும் ஆசைகளை மனத்தில் புதைத்துக் கொள்ள வேண்டும். விதவையானபின் இளமையையும், பாதுகாப்பற்ற தனிமையையும் சந்திக்க வேண்டும். 'மனசுக்குப் பிடிச்ச' துணையை அவர் தேடுவது சரி.

ஆரம்பத்தில் வெகுளியாய் சிவகுமார். தப்பாய்ப் பேசுகிறவர்களிடம் வெகுண்டு எழுகிற சிவகுமார். 'அண்ணி'க்கு அடைக்கலம் கொடுப்பது பற்றிக் குழம்புகிற சிவகுமார்.

பாடல்கள் ஐந்து.

லக்ஷ்மி + மழை. சிவகுமார் + சிலம்பம் இத்யாதிகள்!

## எங்கள் பார்வையில்...

ரொம்ப சுறுசுறுப்பான ஆரம்பம்தான். அப்புறம் 'அவள்' வரப்போகிறாள் என்று 'முகச் சவரம் பண்ணிவிடுங்க' என்று கதறுகிற சிவகுமார். டயட்டில் இருக்கும் டாக்டர், அவர் மனைவி (மனோரமா மனோரமாதான்) என்று நீளமான முன்னுரை.

நல்ல நிதானமாய் நடை போடுகிற மாடுகளைப் பூட்டிய வண்டி மாதிரி கதை அசைந்து அசைந்து நகர்கிறது.

பிய்த்து உதறியிருக்கிறார். குறிப்பாய் மனத்தில் நிற்பது 'ஏன் எல்லாம் அழுவுறீங்க?' என்று இயலாமையில் அவர் வெடிக்கும் இடம்.

கணவனிடம் காட்டுகிற அன்பு, ஒட்டுதல், அவனைச் சந்தேகித்து, படபடப்பும், ஆவேசமுமாய்க் கிணற்றில்விழுகிற அவசரம் - இம்மி பிசகாமல் டைரக்டருக்குக் கை கொடுத்திருக்கிறார் சுலக்ஷணா.

ரொம்பநாளைக்கப்புறம் 'அக்கா' லக்ஷ்மி. கணவன் தலைவருடன் குடிக்கிறான் என்று தெரிகிறபோது அதிர்ச்சியும், ஆத்திரமும் கலந்து முகத்தில் காட்டுகிறார். பின்னால் சிவகுமாரின் இறந்த உடம்பைப் பார்த்துப் பெருமூச்சு விடுகிறார். இன்னும் படம் நெடுக அற்புதமான, இயல்பான முக பாவங்கள்.

அடேயப்பா, சிவகுமார் விசுவரூபமே எடுத்திருக்கிறார். அதுவும் கடைசி கடைசியாய் பாப்பாத்தி வருகிறபோது ஜெயில் கம்பிகளில் முட்டி மோதித் துடிக்கிற துடிப்பு ஒன்று போதும்.

இளையராஜா இனிக்க இனிக்கக் கொடுத்திருக்கிறார்.

தவிர்த்திருக்கலாம். கடைசி 'தத்துவமும்' இல்லாதிருந்தால், ஒரு கதையை கதையாகவே சொல்லி விட்டிருப்பதற்கு மேஜரைக் கண்டிப்பாய்ப் பாராட்டலாம்.

—ஜெயமன்மதன்

# இன்று நீ நாளை நான்





# வெய்யில் இனி என்ன செய்யும்?

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி
ரூ 250 பெறும் மூன்றும் பரிசுக் கதை -1

## சஞ்சீவன்



**வா**சல் கதவுக்கு நேராக வெளிச்சத்தில் அமர்ந்து கறிகாய் நறுக்கிக் கொண்டிருந்த கமலா நறுக்கிய காயைத் தட்டில் போட்டு விட்டு, முழங்கையை உயர்த்தி முகத்தில் பெருகும் வியர்வையை முந்தானையால் துடைத்துக் கொண்டாள். சுற்றுமுற்றும் பார்த்ததில் நெஞ்சு திக்கென்றது. குழந்தை மம்மூதனைக் காணோமே! வேலை மும்முரத்தில் அவனைக் கவனிக்காமல் விட்டு விட்டது நெஞ்சில் உறுத்தியது. வீட்டுக்குள் இருந்த வாறே வாசற்படிக்கு வெளியே திண்ணையில் கையை ஊன்றி வெளியே எட்டிப் பார்த்தாள். வெளியே எங்கேயும் மம்மூதனைக் காணோம்.

கமலா பதற்றத்துடன் எழுந்து அவசரம் அவசரமாகப்பூட்டு சாவியை துழாவி எடுத்து வீட்டைப் பூட்டிவிட்டு ஓடினாள். ஊர்க் கோடியில் இருந்த வீடுகளைத் தாண்டிச் சரிந்து இறங்கும் இறக்கத்தில் சரசரவென்று இறங்கி ஓடினாள். இறக்கம் முடிந்ததும் வயல் வெளிகளுக்கும் தோட்டம் துரவுகளுக்கும் பக்கத்து ஊர்களுக்கும் செல்லும் பாதை அகன்று விரிந்தது. அதோ அந்தப் புளிய மரத்தடி — அதோ அந்த மைல் கல்- அதோ அந்த வாய்க்கால் மேடு. ஊஹூம். எங்கும் மம்மூதனைக் காணோம்.

பாதை இடது பக்கம் பிரிந்து வளைந்து போக ஆரம்பித்தது. வலது பக்கம் வாய்க்கால் மேடு. ஒரு கணம் யோசித்துவிட்டு, இடது பக்கப் பாதையை விட்டு விலகி, வாய்க்கால் மேட்டின் மீது ஏறி ஓடினாள்.

கொஞ்ச தூரத்திலேயே பொட்டல் வெளியில் மாடுகள் மேய்ந்து கொண்டிருந்தன. வேலி ஓரத்தில் மம்மூதன் நின்று கொண்டிருந்ததைப் பார்த்ததும்தான் கமலாவிற்கு உயிர் வந்தது. ஆனாலும் பதற்றத்தில் மம்மூதனை மாடுகள் முட்டி ஏதேனும் ஆகிவிடும் முன்பு அவனை எடுத்துக் கொண்டு ஓட வேண்டும் போல் தோன்ற, ஓட்டத்தைத் தொடர்ந்து வேலி ஓரத்திற்கு வந்து விட்டாள். அங்கே மம்மூதன் கையில் பெரிய கழியுடன் நின்று கொண்டிருந்தான்.

''மம்மூதா... ஏ மம்மூதா...'' அவள் குரல் கொடுத்துக் கொண்டு வருவதைப் பார்த்து மம்மூதன் கையிலிருந்த கழியை மாடுகள் மேய்ந்து கொண்டிருந்த திசையை நோக்கி ஆட்டி தே...தே... என்று குரல் எழுப்பிவிட்டு 'அம்மா நான் மாடு மேய்க்கிறேன்' என்றுசிரித்தான்.

கமலா மண்டியிட்டு அமர்ந்து அவனைத் தோளோடு சேர்த்து வாரிக் கொண்டு எழுந்தாள். கையிலிருந்த கழி கீழே விழுந்து மம்மூதன் சிணுங்கினான். கமலா பக்கத்தில் நின்ற மாட்டுக்காரப் பையன்களைப் பார்த்தாள். அவர்கள் மம்மூதனை விடக் கொஞ்சம் தான் வயதில் பெரியவர்களாகத் தோன்றினார்கள்.

''ஏம்பா... உங்களுக்கு மாடு மேய்க்கறதுக்கு இவன்தான் கிடைச்சானா''—அந்தப் பையன்களைப் பார்த்துக் கமலா அதட்டினாள்.

''இல்லீங்கக்கா. மம்மூதன்தான் வாய்க்கால் மேடு ஏறி வந்து எங்க கூட தட்டாங்கல் விளையாடிட்டு நான் மாடு மேய்க்கறேன்னு தடியை வாங்கினான்'' என்றார்கள் குற்ற உணர்ச்சியுடன் பையன்கள்.

''அதுக்காக அவனை மாடு மேய்க்க உட்டுறதா? நல்ல வேளை, நான் வந்தேன். இல்லேன்னா மாடு கீடு முட்டி ஏதாச்சும்

ஆயிருந்தா... நீங்கள்ளாம் மாடு மேய்க்கப் பழக்கப்பட்டவங்கடா சாமி கண்ணுகளா. மம்மூதன் அப்பிடியா? அவனுக்கு என்ன தெரியும் பாவம்.''

''தப்புத்தாங்கக்கா. நீங்க டவுன்லே இருந்தவங்க, பஸ்ஸு¬ கார்ல போய்ட்டு வந்தவங்கன்னு எங்கப்பா சொன்னுருங்க. மம்மூதனும் டவுன்காரன்தானே. அவனுக்கு என்னங்க தெரியும்? இனிமே அவனே இந்த மாதிரி செய்யச் சொல்ல மாட்டங்கக்கா.''

''சரிசரி, வாடா போகலாம்'' என்று மம்மூதனை எடுத்துக் கொண்டு வந்தாள் அவள்.

வீட்டுக் கதவைத் திறந்து உள்ளே மம்மூதனைக் கொண்டு போய் உட்கார வைத்து அவன் பக்கத்தில் தானும் உட்கார்கையில் அவளையும் அறியாமல் விழி முனையில் கண்ணீர் இரண்டு கன்னத்தில் வழிந்தது.

மம்மூதனுக்கு உண்மையில் பெயர் அமுதன். மாட்டுக்காரப் பையன்களும் ஊர்க்காரர்களும் அந்தப் பட்டணத்துப் பெயர் வாயில் நுழையாமல் மம்மூதா என்று அழைக்கப் போக மம்மூதன் என்ற பெயர் தான் அவனுக்கு இப்போது. டவுனிலிருந்து வந்து கிராமத்துக் கணவனுடன் கிராமத்துக்காரியாக வாழ்ந்து கொண்டிருக்கிறதைப் போலத்தான் அவனுடைய பெயர் மாற்றமும்.

அது போகட்டும். மம்மூதனுக்கு வயது ஐந்துதான் ஆகிறது. ஏறக்குறைய பள்ளிக்கூடம் போக ஆரம்பிக்கிற வயது. டவுனாக இருந்தால் இந்நேரம் பள்ளிக்கூடம் போக ஆரம்பித்திருப்பான். ஹூம். இப்போது என்ன ஆகப் போகிறதோ?

அவள் அதற்குள் அசதியால் தூங்கிவிட்ட மம்மூதனை எடுத்து மடியில் கிடத்திக்கொள் கையில் மனசுக்குள் வேதனை பரவியது.

அவளுடைய அப்பா சொந்த ஊரான இந்த வடுகப்பட்டியிலிருந்து போய் டவுனில் லாரி டிரைவராக இருந்து சொந்த லாரி வாங்கியதும் அவளுடைய அம்மாவை வடுகப்பட்டியிலிருந்தே பெண்ணெடுத்து மனைவியாக்கிக் கொண்டு டவுனிலேயே குடியேறினார். சொந்த வீடு கொஞ்ச காலத்திலேயே குடும்பச் சொத்தாகியது. அவளுடைய அம்மாவும் கமலாவைப் பெற்றெடுத்துச் செழிக்கச் செழிக்கக் குடும்பம் நடத்தி வந்தாள். கமலாவின் அம்மா கிராமத்திலிருந்து நகரத்திற்கு வரக் காரணமாக இருந்த அவளுடைய அப்பாவே கமலா மட்டும் மீண்டும் கிராமத்துக்கு வரவேண்டிய சூழ்நிலை உருவாகக் காரணமாக இருந்தார்.

கொடி கட்டிப் பறந்த மகராசனை அவளுடைய அப்பா கட்டின பெண்டாட்டி போதுமென்று சும்மா இருக்காமல் கல்யாண வயதில் ஒரு மகள் இருக்கையில் ஒரு ஆசை நாயகியை வைத்துக் கொண்டிருந்து விட்டு, அவள் ஓடிப்போக மனமுடைந்து உருகி, பாட்டிலும் கையுமாக தேவதாஸாக மாற குடும்பத்தின் சொத்துக்கள் கரையத் தொடங்கின. அப்பா க்ஷயரோகத்தில் விழுகையில் லாரியை விற்றுவிட்டது.

வைத்தியங்கள் தேடிச் சேர்த்துக் கொண்ட வியாதியைக் குணப்படுத்த முடியாமல் போக, அப்பா காலமானார். சொந்த வீடும் வைத்தியச் செலவில் கரைந்தாகிவிட்டது. அம்மாவும் உடம்பு சரியில்லாமலாகி ஊரிலிருந்த தம்பியை வரவழைத்தாள். ஊரில் அவனுக்குக் கூலி வேலைதான். இருந்தாலும் இருக்கிற நிலையில் வயதுக்கு வந்த மகளை ஓர் ஆடவனுடைய கையில் பிடித்துக்



கொடுக்க வேண்டிய கட்டாயம். கமலாவை மணமுடிக்க அவள் தம்பி முத்துவேலனுக்குக் கொஞ்சம் கூட இஷ்டமில்லை. படித்த பட்டணத்துப் பெண்ணை எட்டாங் கிளாஸ் படித்த பட்டிக்காட்டான் கல்யாணம் செய்வதாவது? அவன் மறுக்க மறுக்க அவனுடைய அக்காவின் உடல்நிலை மோசமாகி அவளும் மரித்தாள். அவளுடைய காரியங்கள் முடிந்தபோது வீட்டு வாடகை ஆறு மாதம் பாக்கி நின்றது. முத்துவேலன் யோசித்துக் கொண்டிருக்கையிலேயே கமலா ஒரு முடிவுக்கு வந்து விட்டாள். அவனை மணந்து கொண்டு அவனுடைய ஊருக்குக் கூட்டிக் கொண்டு போக வேண்டும் என்று கமலா மன்றாடினாள். கையிலிருந்த கொஞ்ச பணத்தைக் கொடுத்து வீட்டு வாடகைப் பாக்கியைத் தீர்த்துவிட்டு, கமலா சொன்ன படியே அவளைக் கோயிலில் கரம் பிடித்து ஊருக்கு அழைத்து வந்தான். கமலாவும் கிராமத்துக்காரியானாள்.

முத்துவேலன் படிக்காதவன்தான். கிராமத்தான்தான். ஆனாலும் குடிக்காதவன். சூதாட மாட்டான். எப்போதாவது புகைக்கும் பீடிமட்டும்தான் இருக்கிற ஒரே கெட்ட பழக்கம். பட்டணத்து வாழ்க்கையுடன் ஒப்பிடும்போது கிராமத்து வாழ்க்கையில் செலவு குறைவுதான். சினிமா இல்லை, வீதி உலா இல்லை; பொழுது போக்கு சுற்றுப் பயணங்கள் இல்லை. இருந்தாலும் முத்துவேலன் கூலி வேலைக்குப் போய்க் கொண்டு வருகிற காசு ஜீவனத்துக்குத்தான் சரியாக இருக்கிறது. 'இதற்குத்தான் நானும் வேலைக்குப் போகிறேனே' என்று அவள் கேட்டபோது.

''கூலி வேலைக்கா...' நீயா புள்ளேபோகணு மிங்கிறே? உன்னால முடியாதும்மா அதெல்லாம். டவுனுல இருந்து சுகப்பட்ட உடம்பு இங்க வந்து பாடுபட முடியுமா என்ன? முதலாவது வெய்யில் தாங்குவியா நீ? நாங்கள்ளாம் இங்கேயே சின்ன வயசுல இருந்து வெட்ட வெய்யில்ல பாடுபட்டுப் பழகினவங்க. எங்களுக்குத் தாங்கும். உன்னால முடியாதும்மா'' என்று பாதிச் சிரிப்பும் பாதி இறைவுமாய் ஆதூரத்துடன் அவளைச் சமாதானப்படுத்தி அடக்கி விட்டான்.

அவளுக்கும் அவன் சொன்ன மாதிரி வெய்யிலே ஆகாது. இதை நினைக்கும்போது வீட்டுக்கு வெளியே கொளுத்தும் வெயிலைப் பார்த்து 'அப்பா, என்ன வெய்யில்' என்று வாய் முணு முணுத்தது. வீட்டுக் கூரையின் நிழல் தெருவிலிருந்து உள்வாங்கித் திண்ணையின் மீது விழத் தொடங்கியிருந்தது. மணி ஒன்றரை இருக்கலாம். முத்துவேலன் வருகிற நேரமாயிற்றே. இன்றைக்கு அவனுக்குக் கிணறு வெட்டும் வேலை. ஒருவேளை நேரமாகலாம்.

அவள் வீட்டு வாசற்படிக்கு வெளியே தலையை நீட்டிப் பார்த்தாள். இறக்கத்தில் கட்டை வண்டி ஒன்று வருவது தெரிந்தது. கட்டை வண்டி மெல்ல மெல்ல மேடேறி அருகில் வருவதைப் பார்த்துக் கொண்டிருந்தாள். வண்டி அருகில் வர வரத்தான் அதில் இருப்பவர்கள் பதற்றத்தில் இருப்பதைக் கவனித்தாள். கட்டை வண்டியை ஓட்டி வருவது சின்னான் அல்லவா? அவன் முகம் கூட ஒரு மாதிரி இருக்கிறதே. கட்டை வண்டி சின்னான் கயிற்றை இழுத்துப் பிடிக்க வீட்டு முன்பு நின்றது.

''முத்துவேலனுக்கு அடிபட்டிருச்சுங்கோ'' என்று வண்டியிலிருந்த சக கூலியாள் ரங்கன் சொல்ல, கமலா ''அய்யோ'' என்று அலறிய படி எழுந்து வீட்டுத் திண்ணையைத் தாண்டிப் பாதையில் வந்து நின்றாள். கட்டை வண்டிக்கு அருகில் போக அவள் எத்தனிக்கையில் வண்டியிலிருந்து இருவர் குதித்து வண்டிக்குள் நீளவாட்டில் படுக்க வைத்திருந்த முத்துவேலனைத் தாங்கி வாங்கிக்கொள்ள, வண்டி மேலிருந்து இருவர் அவனை வாகாக இறக்கி

# ஜோக் எழுதியவர் யார்?

இந்த இதழ் முதல் பக்கத்தில் மொத்தம் ஐந்து ஜோக்குகள் பிரசுரமாகியுள்ளன. 'கல்கி' வாசகர்களுக்கு நன்கு அறிமுகமான கதர்லைன், வெ. சீதாராமன், உ. ராஜாஜி, சிறை அ. கதிர்வேல், கடலூர் கன்னியப்பன் ஆகிய ஐவருடைய ஜோக்குகள்தாம் அவை.

எந்த ஜோக்கை யார் எழுதியிருப்பார் என்று நீங்கள் யூகிக்க வேண்டும். உங்களது விடையைக் கீழ்க்கண்ட கூப்பனில் எழுதி அனுப்புங்கள். முற்றிலும் சரியான விடைக்குப் பரிசு ரூ. 300. ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதியிருந்தால் பரிசுத் தொகை பகிர்ந்தளிக்கப்படும். பத்து பேருக்கு மேல் சரியான விடை எழுதியிருந்தால் குலுக்கல் முறை மூலம் பத்து அதிர்ஷ்டசாலிகள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

உறையின் மீது 'ஜோக் எழுதியவர் யார்' என்று குறிப்பிடவும். விடைகள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி: 5-9-83.

| ஜோக் எண் | எழுதியவர் |
| --- | --- |
| 1 | |
| 2 | |
| 3 | |
| 4 | |
| 5 | |

என் பெயர்: ____________________

முகவரி: ____________________

கையெழுத்து: ____________________

னார்கள். முத்துவேலனை வீட்டுக்குள் கொண்டு வந்து கிடத்தினார்கள். கமலா அழுதபடி கீழே குனிந்து மண்டியிட்டுப் பார்த்தாள். அவனுடைய வலது கால் ஏறக் குறைய நசுங்கிப் போயிருந்தது. முத்துவேலன் வலி பொறுக்க முடியாமல் முனகிக் கொண்டிருந்தான்.

''காலே பூராப் போச்சு போலிருக்கே. அய்யோ, இது எப்படி ஆச்சுங்க?'' அவள் அழுதுகொண்டே கேட்டாள்.

''கெணறு வெட்டறப்போ பாறை தென் பட்டுதுன்னு வெடி வச்சு ஒடைச்சோம். முத்துவேலன் வெடி வச்சுட்டு வர்றதுக்குள்ளேயே வெடி வெடிச்சுடுச்சு. நல்லவேளை காலுல மட்டும்தான் அடிபட்டிருக்கு. வேற எங்காவது ஏகமாப் பட்டிருந்தா ஆளே இப்ப இருக்க மாட்டான்.'' ரங்கன் சமாதானப்படுத்த முயன்றான்.

''இவருக்கு இப்பிடி ஆயிருச்சே! நான் என்ன செய்வேன் தாயே'' அவள் மம்முதனைக் கட்டிக் கொண்டு அழ ஆரம்பித்தாள். மம்முதன் விழித்தெழுந்து தாயைப் பார்த்து அழ ஆரம்பித்து விட்டான்.

''என்னோட தோட்டத்துல கெணறு வெட்ட வந்தவனுக்கு இப்பிடி ஆயிடுச்சே. கால் இருக்கிற கோப்பைப் பார்த்தா எனக்கே கஷ்டமா யிருக்கம்மா. அம்மா கமலம், மத்தியானம் அப்பிடியே வண்டியிலேயே மெயின் ரோட்டுக்குப் போயி வாடகைக் காரு புடிச்சு கோயமுத்தூர் பெரியாசுப் பத்திரிக்குக் கொண்டு போகலாம். வைத்தியச் செலவெல்லாம் நான் பாத்துக்கறேன். நீ இப்பக் கிளம்பும்மா'' — வண்டியில் கூட வே வந்திருந்த கந்தசாமிக் கவுண்டர் அவளைப் பார்த்துச் சொன்னார்.

மத்தியானம் அவர்கள் கட்டை வண்டியில் கிளம்பி மெயின் ரோடு வந்து உடனடியாக டாக்ஸி பிடித்து பெரியாஸ்பத்திரிக்கு வந்து சேர்ந்தார்கள். தீவிர சிகிச்சைப் பிரிவில் சேர்த்த பிறகு டாக்டர்கள் வந்து பார்த்தார்கள். கொள கொளத்துப் போயிருந்த முத்துவேலனின் காலைத் தொட்டுத் தொட்டு அமுக்கிப் பார்த்தார்கள். கூடிக் கூடித் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள். காலுக்கு மருந்திட்ட பிறகு கமலாவைத் தனியே கூப்பிட்டார்கள்.

''இந்தாம்மா. நீதானே இந்தாளு பொண்சாதி?''

''ஆமாங்கய்யா.''

''இப்ப இவருக்கு ஏதாவும் செஞ்சு காலைக் காப்பாத்த முடியுமான்னுபாத்தோம். காலுல அடிபட்டதுல முழங்காலுக்குக் கீழே ஒரு எலும்பு விடாம ஒடஞ்சிருக்கு. அத்தனையும் இனி ஒண்ணு சேர்றதுங்கறது இனிக் கஷ்டம். காலே இப்படியே விட்டா கால் பூரா ஏகமா அழுகிப் போகும். அதுனாலே கால் முட்டிக்குக் கீழே காலை எடுத்துர்றது தான் ஒரே வழி. நீ என்னம்மா சொல்றே?'' என்று கேட்டபோது அவள் அழுதாள். அரற்றினாள். நெஞ்சில் அடித்துக்கொண்டாள்.

அவர்கள் ஊர் திரும்பியபோது முத்துவேலன் ஓர் ஊன்றுகோலுடன் திரும்பி வந்தான்.

வீட்டு ஜீவனத்துக்குக் கூலி வேலை செய்து ஐந்தோ பத்தோ கொண்டு வந்தவன்;




மேலட்டை வண்ணப்படம் :
**திலீப் பானர்ஜி**

இனி எங்கும் போக முடியாது. கந்தசாமிக் கவுண்டர், பெயருக்கு ஏதோ ஒரு தொகையைக் கொடுத்துவிட்டு ஒதுங்கிக்கொண்டு விட்டார். கையில் இருக்கும் தொகை இன்னும் ஐந்து நாட்கள் வந்தாலே அதிகம் என்கிற நிலை வந்தபோது மம்முதனையும் கூட்டிப் பக்கத்தில் இருத்திக் கொண்டு, ''நாமெல்லாரும் மருந்து குடிச்சுச் செத்துருவமா புள்ளே'' என்றான் முத்துவேலன்.

''ஏங்க இந்த மாதிரிப் பேசறீங்க? நீங்க சம்பாதிக்காட்டி என்ன? நான் எதுக்கு இருக்கேன். நான் எல்லாம் கேட்டு வச்சிருக்கேன். பக்கத்து வூட்டு மருதாயி அக்கா கூட சொல்லுச்சு. களையெடுக்கிற வேலை கணுவாத்தான் இருக்குமாம். ஒரு நாள் கூலி பத்து ரூபாயாமில்லே?'' கமலா பளிச்சென்று பதில் சொன்னாள்.

''அது சரி புள்ளே. உன்னால முடியுமா?'' இயலாமையுடன் முத்துவேலன் கேட்டான்.

''ஏன் முடியாமே? மனசிருந்தா எல்லாம் முடியும். காலையில சோறாக்கி வச்சுட்டுப் போனா காலேலருந்து மத்தியானவரைக்கும் வேலை. மத்தியானம் வந்து சாப்பிட்டுட்டுப் போய் சாயந்திரம் ஆறு மணி வரைக்கும் செஞ்சுட்டு ஓடியே வந்துரலாம். இது பெரிய காரியமா?''

''நான் இப்பிடியே கெடக்கிறவன்தான்.''

''நீங்க ஏன் சும்மா இருக்கோணும்? நான் கூலி வேலைக்குப் போயி கொஞ்சம் காசு சேரட்டும். டவுனிலே உடல் ஊனமானவங்களுக்குன்னு பள்ளிக்கூடம் வச்சு, தச்சு வேலை, மெஷின் வேலை யெல்லாம் சொல்லித் தர்றாங்க. அங்க போயி வேலை பழகிட்டு வந்துட்டா வூட்லேயே இருந்து தச்சு வேலையாவது செஞ்சுட்டு உக்காந்துக்கலாம்.''

''அப்படியா புள்ளே? நான் வேலை செய்ய முடியுமா? இதுக்குத்தான் நாலெழுத்துப் படிச்சிருக்கோணுங்கறது. எனக்கிது தெரிஞ்சுதா பாரு. சரி தாயி, நீ உன் இஷ்டப்படி செய்யி'' என்று அவன் அனுமதியளித்தான்.

கமலா முதன் முறையாகக் கூலி வேலைக்கு வந்திருக்கிறாளென்று அவளை அனுதாபத்துடன் பார்த்த பெண் கூலியாட்களில் சின்னப் பொடிசுகள் முதற்கொண்டு



# அச்சா காதர் பாட்சா!

சென்னை அமரபாரதி பரிக்ஷா சமிதி நடத்திய 'ப்ராத்மிகா' சம்ஸ்கிருத பரீட்சையில் தமிழ் நாட்டிலேயே முதலாவதாக வந்து தங்கப் பதக்கம் பெற்றிருக்கிறான் சென்னை பெரம்பூரைச் சேர்ந்த எம். காதர் பாட்சா என்ற சிறுவன். முஸ்லீம் சமுதாயத்தைச் சேர்ந்த ஒரு சிறுவன் ஆர்வத்துடன் சம்ஸ்கிருதம் படித்து முதலிடம் பெற்றிருப்பதை அறிந்து அவனைக் கண்டு பேசலாம் என்று வியாசர்பாடியில் உள்ள அவன் வீட்டுக்குச் சென்றோம். வீட்டைக் கண்டு பிடிப்பதற்குள் போதும் போதும் என்றாகிவிட்டது. அது ஒரு குடிசைப் பகுதி. குறுகலான தெருக்கள். இந்தச் சூழ் நிலையில் வசிக்கும் ஒரு மாணவன் புத்திசாலியாக விளங்குவது பாராட்டத்தக்கது தான். ஆனால் காதர் பாட்சாவோ ''எல்லா வற்றுக்கும் காரணம் என் ஆசிரியர் தசரதராம ரெட்டிதான்'' என்கிறான். காதர்பாட்சா வீட்டில் உருது பேசுவார்கள். பெரம்பூரில் உள்ள ஆர்.பி.சி.சி. பள்ளியில் எட்டாவது படிக்கும் காதர் பாட்சா இரவு தூங்கும்நேரத்தைத்தவிர மற்ற நேரத்தைப் பள்ளியிலும் ஆசிரியர் வீட்டில் டியூஷன் படிப்பதிலும் தான்செலவழிக்கிறான். மிகவும் வறுமையான குடும்பம். ''இந்தப் பையன் படித்துச் சம்பாதித்தால்தான் ஏதாவது வழி பிறக்கும்'' என்கிறார் காதர் பாட்சாவின் அம்மா.

காதர் பாட்சாவின் ஆசிரியர் திரு தசரத ராம ரெட்டியைச் சந்தித்தபோது அவர் சொன்னார்: ''காதர் பாட்சா இயல்பாகவே புத்திசாலித்தனம் கொண்டவன். நான் ஏற்கெனவே ஆறு வருடங்களுக்கு முன் ஒரு முஸ்லீம் மாணவியை சம்ஸ்கிருதம் படிக்க வைத்திருக்கிறேன். பத்து வருடங்களாக சம்ஸ்கிருதம் சொல்லித் தருகிறேன். நமது இந்து கலாசாரத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமானால் ஒவ்வொருவரும் சம்ஸ்கிருதம் படிக்க வேண்டும்!''

-தில்லப்பா

படம்: ஸ்பைடர்மேன்

---

இருந்தார்கள். வீட்டில் சும்மா இருந்தபோது படித்திருந்ததால்கற்பனைக் கண்ணோடு கிராமத்து இயற்கையைரசிக்க முடிந்தது அவளால். கிராமம் என்றால் மரமும் நிழலும் கண்ணுக்குப் பச்சையும் மட்டுமல்ல. வெய்யிலும் வியர்வையும் உழைப்பும்தான் என்று புரிகிற வேளை வந்திருக்கிறது என்று சொல்லிக்கொண்டாள்.

''இத பாரு கமலா, இந்த மாதிரி வெட்டணும். கடலைச் செடிக்கடியிலே இருக்கிற களையை வெட்ட செடியை வெலக்கி வெட்டணும்.'' செல்லாயிப் பாட்டி சொல்வதைக் கவனமாய்க் கேட்டுக் கொண்டிருந்து விட்டு வெட்ட ஆரம்பித்தாள். மற்றவர்கள் ஒரு முழம் போன பின்பும் இன்னும் அவள் ஆரம்பித்த இடத்திலேயே வெட்டிக் கொண்டிருந்தாள். கை களைவெட்டியின் மரப்பிடி பட்டு எரிந்தது. உள்ளங்கை தோல் விரல்களுக்குப் பக்கத்தில் உரிந்து வர ஆரம்பித்து விட்டது. கண்ணில் நீர் திரள. கீழே குனிந்து வெட்டுகையில் முதுகு வலி தாள முடியவில்லை.

ஒரு கணம்தான் இதெல்லாம் பாரமாகப் பட்டது. வீட்டிலிருக்கும் முத்து வேலனையும் மம்முதனையும் நினைக்கையில் நிராதரவான தன்னுடன் விளையாடும் சூழல்களை நினைத்து ஆக்ரோஷம் வந்தது. நிலைமை இப்படியே போய் விடாது. கொஞ்சம் காக சேர்ந்ததும் முத்துவேலனை ஊனமுற்றோர் பள்ளியில் சேர்த்து வேலை பழக்க வேண்டும். முத்துவேலன் தச்சு வேலை ஏதாவது செய்ய ஆரம்பித்து விட்டால் மம்முதனைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்ப வேண்டும். அவன் மாடு மேய்க்கப் போகக் கூடாது. படித்து முன்னுக்கு வரவேண்டும். அதுவரை பொறுமையாக இருக்க வேண்டியதுதான்.

மற்றவர்கள் தலைக்குக் கட்டியிருப்பது போல வெய்யிலுக்கு மறைப்பாகத் தலைக்கு ஒரு துணியைச் சுற்றிக் கட்டிக் கொண்டு களைவெட்டியை வாகாகப் பிடித்து மளமளவென்று உறுதியுடன் வெட்ட ஆரம்பிக்கையில் அவர்களுக்கு முன்னே சென்றவர்களுக்கும் அவளுக்குமிடையே இடைவெளி குறைய ஆரம்பித்திருந்தது.

# ஒரு வியர்வைத் துளியின் 'நெடிய பயணம்...!'



## — எழிலவன் —

தொண்டர்கள் இன்றித் தோழர்கள் இன்றித்
தொடங்கிய பயணம் இது! — இரு
தோள்களின் உழைப்புத் தூரிகை வெயிலில்
தோன்றிய படிவம் இது!

வித்துகள் புதையும் வயல்களுக் கிதுதான்
விட்டமின் மாத்திரையாம்! — பயிர்
முத்து விளைச்சலின் மொழிபெயர்ப்புக்கு
மூலப் புத்தகமாம்!

உப்புக் கனிகளை உடலின் தோல்மரம்
இப்படி உதிர்க்கிறது! — பூமி
உருண்டைகூட ஓர்துளி வியர்வைமுன்
கடுகாய்த் தெரிகிறது!

இயற்கையின் ரகசியக் கதவுகள் தம்மை
இதுதான் திறக்கிறது! — இதன்
இறக்கைகளாலே மானிட வர்க்கம்
எழுந்து பறக்கிறது!

சுரண்டலின் சக்கரம் இதன்சிறு அச்சில்
சொகுசாய்ச் சுழல்கிறது! — எனவே
சோக நதிகளில் ஏழ்மையின் நீச்சல்
தொடர்கதை யாகிறது!

அமைத்ததும், புவியை அழகுறக் காத்து
அளித்ததும், வியர்வைதான்! — மண்ணில்
சமத்துவம் என்பது வரும்வரையில் — காலச்
சரித்திரம் விதவைதான்!



பாக்யராஜ்

○ எஸ். ரவீந்திரன், கடலூர்

? இலங்கையில் தமிழர் படுகொலை ஜாலியன்வாலாபாக் படுகொலையை விட மோசமாக இருக்கிறதே?

! ஜாலியன்வாலா — ஒரு கொலை வெறியனின் முன் கூட்டியே திட்ட மிட்ட படுகொலை. இலங்கை — குபுக்கென்று பற்றி எரியும் காட்டுத் தீ போல் உணர்ச்சி வேகத்தில் உருவான கலவரம். இரண்டையும் ஒப்பிடுதல் தவறு.

○ இ. பி. ராஜு, கல்பாக்கம்

? இலங்கையில் துயருற்று வாழும் தமிழருக்கு ஒருநாள் ஊதியத்தை அளித்தாலும் நன்மை உண்டு; ஊர்த்தால் செய்வதால் என்ன பயன்?

! ஊர்த்தால் தமிழ் நாட்டின் ஒட்டு மொத்தமான கண்டனத்தை இலங்கை அரசுக்கும் அனுதாபத்தை ஈழத் தமிழருக்கும் தெரிவிப்பதில் மாபெரும்வெற்றி பெற்றது. நீங்கள் ஒருநாள் ஊதியத்தை முதல்வர் அறிவித்துள்ள நிதிக்கு அனுப்புங்களேன் யார்குறுக்கே நிற்கிறார்கள்!

○ எம். சிவஞான முருகன், ஸ்ரீவைகுண்டம்

? ஹெர்ஷ் எழுதிய புத்தகத்துக்கு இந்தியாவில் தடை விதிக்க முடியாது என்று பம்பாய் உயர்நீதி மன்றம் தீர்ப்பளித்துள்ளதே?

! நூலில்மிகச்சிறு பகுதியில் தான் மொரார்ஜி பற்றிய கருத்து வருகிறது. மற்ற பக்கங்களெல்லாம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை என்பதால் தடை விதிக்க முடியாதென்றாலும் நூலின் முகப்பில் ஒரு விளக்கவுரை இடம்பெற வேண்டும் என்று உத்தரவிட்டிருக்கிறார் நீதிபதி. சரியான தீர்ப்புதான். ஆனால் மொரார்ஜி அப்பீலில் போயிருக்கிறார்.



ஹெர்ஷ்

? இந்திரா எதிர்க் கட்சியில் இருந்தபோது ஈழத் தமிழர் பிரச்னையில் காட்டிய அக்கறையை இப்போது ஆட்சியில் உள்ளபோது காண்பிக்கவில்லை என்று இந்திராவின் ஒரு கடிதத்தை மேற்கோள் காட்டிக் குற்றம் சாட்டியிருக்கிறாரே கருணாநிதி? ★

! கருணாநிதி இப்போது ஈழத் தமிழர் பிரச்னையில் காட்டும் அக்கறையை முன்பு அவர் ஆட்சியில் இருந்தபோது காண்பிக்கவில்லை என்று ஆதாரங்களுடன் சுட்டிக் காட்டியிருக்கிறாரே எம். ஜி. ஆர்.! எதிர்க் கட்சியில் இருக்கும் போது பொறுப்பின்றிப் பேசி நடத்து கொள்ளலாம். ஆனால் ஆட்சியில் இருக்கும்போது நிதான புத்தி மேலோங்குவது இயல்பு.

○ கே. என். ராமகிருஷ்ணன், கரூர்

? ஐ.நா.விலும் ஒன்றும்செய்ய முடியாது. நமது சர்க்காராலும் தீவிரமாக ஏதும் செய்ய முடியாது என்னும்போது தமிழர் நிலை அடிமை வாழ்வாக நீடிக்க வேண்டியது தானா?

! தேவையில்லை. தனி சுதந்திர ஈழத் தமிழ் நாடு கோரிக்கையை விட்டொழித்து விட்டுச் சிங்களவருடன் சம உரிமை, தமிழர் வாழ் மாநிலங்களுக்கு அதிகமான சுயாட்சி அதிகாரங்கள், தமிழரின் மொழி, பண்பாடு, கலாச்சாரம் ஆகியவற்றுக்குப் பாதுகாப்பு போன்றவற்றுக்காக சாத்வீக முறையில் போராடி வெற்றி பெற வாய்ப்புகள் உண்டு. உலக நாடுகளின் நல்லாதரவு கிட்டும்.

○ எம். சம்பத், வேலாயுதம்பாளையம்

? 'தமிழரின் பாதுகாப்பு ஜெயவர்த்தனேதான்' என்று வர்ணிக்குமளவு இலங்கைத் தமிழ் அமைச்சர் தொண்டைமான் கண்களை மறைத்திருப்பது என்னவாக இருக்கும்?

! சரியான பார்வையை அளிக்கின்ற மூக்குக் கண்ணாடியாக இருக்கும். (பலருடன் கூடிய கறுப்புக் கண்ணாடி.) ஜெயவர்த்தனே யன்றி வேறு சிங்களவர் ஆட்சிக்குவந்தால் தமிழர் நிலை இன்றுள்ளதையும் விடப்பாதுகாப்பற்றதாகப் போகும். எனவே அவர் ஆட்சியில் இருக்கும்போதே தமிழர் வன்முறைகளைக் கை விட்டுப் பேச்சு வார்த்தைகளை நடத்தித்தங்கள் நிலையை ஸ்திரப்படுத்திக் கொள்வது நல்லது.

○ என். பாலு, திருச்சி-18

? இலங்கைப் படுகொலைக்கு வெளி நாட்டுச் சதியே காரணம் என்ற ஓலம் அங்கும் கேட்கிறதே?



தொண்டைமான்

# இந்திரா மீது கருணாநிதி குற்றச்சாட்டு.....

# நீங்கள் கேட்டவை தராசு

! அப்படி ஆரம்பத்தில் கூறிய ஜெயவர்த்தனே பிறகு தடம் மாறி இது உள்நாட்டில் ஆட்சியைப் பிடிக்கவெளிநாட்டு ஆதரவுடன் நடந்த சதி என்று அறிக்கைவிட்டிருக்கிறார்.

○ எஸ். வி. ராஜசேகர்; சென்னை-5

? 'ராணுவம் என் கைக்குள் அடங்காமல் போய்விட்டது' என்று ஜெயவர்த்தனே கூறுவதை நம்புகிறீரா?

! நம்புகிறேன். அவரின் கையாலாகாத்தனத்தை. ஆனால் ஆட்சியைப்பிடிக்க நடந்த சதியின் விளைவுதான் இந்தக் கலவரங்கள் என்ற அவர் கூற்றை ஜீரணிப்பது கஷ்டமாக இருக்கிறது.

○ இராமு குமார், திருவானைக்கோவில்

? தனித் தமிழ் நாடு கோரினால் மரண தண்டனை என்று இலங்கை அரசு கொண்டு வந்திருக்கும் சட்டம் பற்றி?

! சட்டம் சரி, தண்டனை அதிகம்.

○ ஆர். சிவராஜ், லால்குடி

? தி.மு.க.வின் போராட்டத்துக்குப் பயந்துதானே 5-8-83 அன்று மத்திய அரசு தமிழ் நாட்டில் ரயிலை ரத்து செய்தது?

! இல்லை. அசம்பாவிதங்கள் ஏதும் நடந்தால் மக்கள் அப்போதும் மத்திய அரசைக் குறை கூறுவார்களே, அதற்குப் பயந்து. தி. மு. க.வுக்குப் பயப்படுவதை விட அதிகமாகவே பொது மக்களுக்குத் துன்பம் ஏற்பட்டு விடக்கூடாதே என்று பயந்திருக்கிறார்கள். ஆக கண்டனத்துக்கு உரியவர் தேவையற்ற ரயில் நிறுத்தப் போராட்டத்தை நடத்த முற்பட்ட கருணாநிதியே.

○ அ. கல்குல் ஜமால், திருமங்கலக்குடி

? திருச்சியில் பஸ் டிரைவர் ஒருவர் தாறுமாறாக பஸ்ஸை ஓட்டி பல உயிர்கள் பலியான சம்பவம் பற்றித் தாங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

! 'எனக்கு என்ன நேர்ந்தது என்று எனக்கே புரியவில்லை' என்று அந்த பஸ் டிரைவர் புலம்பும் போது நான் என்ன நினைப்பது? போலீஸ் அவரை மன நோய் மருத்துவரிடம் அழைத்துப் போகலாம்.



காமராஜ்

○ ஏந்தல் ஆர். இளங்கோ, திருச்சி

? காமராஜரின் வாரிசு ராஜீவ் தான் என்று சிவாஜி கூறியிருக்கிறாரே?

! யாருக்காகப் பரிதாபப் படுவது? மூவருக்கும் ஒட்டு மொத்தமாய் நமது அனுதாபங்கள்!

? டெலிஃபோன் இலாகா சரியாக இயங்கவில்லை என்று குறைப்படுகிறாரே, பிரதமர்?

! குறைப்பட அவர் ஒருவர்தான் பாக்கியிருந்தது. பட்டு விட்டார். ஆயினும் என்ன? டெலிஃபோன்கள் வழக்கம் போல் மக்கர் செய்யும்.

○ ஆர். கோபாலன், திருச்சி

? பள்ளிக் குழந்தைகளைப் பிரம்பால் அடிப்பது குறித்துப் பெற்றோர் கருத்தறிந்தபின் சட்டம் தளர்த்தப்படும் என்று கூறும் பிரிட்டிஷ் அரசு பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

! பிரிட்டிஷ் அரசைப் பிரம்பால் நாலு சாத்து சாத்தவாமா என்று நினைக்கிறேன். குழந்தைகளைப் பிரம்பால் அடிப்பது தவறு என்பதில் மறு அபிப்பிராயம் இருக்க முடியாது; கூடாது.



நெடுமாறன்

○ சி. மூர்த்தி, திருப்பூர்

? நெடுமாறன் தொண்டர் படை இலங்கை செல்வதை இந்திய, இலங்கை அரசுகள் அனுமதிக்குமா? கைதானால் பப்ளிஸிட்டி மட்டும்தானே மிஞ்சும்?

! வேறு எதற்காக இவர்கள் ''படையெடுப்பு'' என்று கருதுகிறீர்கள்!

○ க. ராமசாமி, அவினாசி

? ஒரு நாட்டில் வாழும் சிறுபான்மையோரைப் படுகொலை செய்துவிட்டு வானொலியில் பக்திப் பாடல்களை ஒலி பரப்பினால் செய்த பாபம் தீர்ந்து விடுமா?

! கறுப்புத் துணி பாட்ஜ் அணிந்து நாம் இங்கு நடமாடுவதால் ஈழத் தமிழர் பிரச்னை தீர்ந்து விடுமா? இலங்கை வானொலியின் நல்லெண்ணத்தைச் சந்தேகிக்கத் தேவையில்லை.

○ கமாலி, மேலப்பாளையூர்

? ஹெக்டே காவிரிப் பிரச்னை பற்றி வெட்டொன்று துண்டு இரண்டாக அறிக்கை வெளியிட்டு விட்டாரே?

! நம் தாகத்தை ஹெக்... ஹெக்.... ஹெக்... டே உணரவில்லை.

○ எஸ். பி. ஜ. முருகதாஸ்

? பாக்யராஜின் வெற்றியின் ரகசியமென்ன?

! சராசரி மனிதருள் தானும் ஒருவன் போல நடிக்கும் திறன்.

○ எச். லதா, திருவனந்தபுரம்

? கடவுள் உங்கள் முன் தோன்றினால் என்ன வரம் கேட்பீர்கள்?

! ''இம்மாதிரியான கேள்விகளிலிருந்து என்னைக் காப்பாற்று!''

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:

எம். சிவஞான முருகன், 35, சிவன்கோவில் தெரு, ஸ்ரீவைகுண்டம்-628 601




அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்ற கதை, முதல்தரமான கதையே. நல்லதொரு கருத்தை இயல்பாக நடைபெறும் சம்பவங்களைக் கொண்டு தெள்ளிய நீரோடை போன்ற நடையில்; எழுதியிருக்கிறார். கதையைப் படித்த பிறகு வெகுநேரம் மனத்தில் அசை போட்டுக் கொண்டிருந்தேன்.

சின்னசேலம் கோ. பாபு

கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் முதல் பரிசுக் கதையான ''யாரோ பார்க்கிறார்கள்'' அருமையானது. சமீப காலத்தில் இப்படிப்பட்ட ஆனால் அதே சமயத்தில் யதார்த்தங்களுடன் பிணைந்து புனையப் பெற்ற சிறப்பு மிக்க கதையை நான் படித்ததாக நினைவில்லை.

சென்னை-24 வி. என். சுப்பராவ்

தலையங்கம் படித்தேன். முற்றிலும் உண்மை. தமிழ் நாட்டையே குத்தகை எடுத்துக்கொண்டு மாறி மாறி இந்திராவின் துதி பாடும் இரு கழகங்களும் அஸ்ஸாம், பஞ்சாப் பிரச்னைகளுக்கு எண்ணெய் ஊற்றிக் கொழுந்து விட்டு எரியச் செய்யும் இந்திராவும் நாளுக்கொரு விதச் சண்டை போட்டுக் கொள்ளும் எதிர்க் கட்சிகளும் இந்த நாட்டைக் காப்பாற்றவே வழி தேடவில்லை. இவர்கள் எப்படி ஈழத் தமிழர்களைக் காப்பாற்றப் போகிறார்கள்! ஆண்டவன்தான் காப்பாற்ற வேண்டும்.

சென்னை-78 தேசாய் தாசன்

வாசகர் வாழ்க்கையில் வெற்றி யடைய வேண்டும் என்ற நல்லெண்ணத்துடன் மேல் நாட்டு வாழ்வியல் அறிஞர்களின் கருத்துக்களைத் தொகுத்து அளித்த முகுந்தன் அவர்களுக்கும் அதை இலவச இணைப்பாக வழங்கிய கல்கிக்கும் வாசகர்களின் சார்பில் மனமார்ந்த நன்றிகளும், பாராட்டுக்களும்.

லால்குடி ஆ. சந்திரசேகரன்

நீங்கள் கொடுத்த பரிசு 'வெற்றி உங்கள் கையிலே' எனக்கு உண்மையாகவே அருமருந்தாகப் படுகிறது. கோடி அட்சரங்கள் சொல்லாத உயர்ந்த மந்திரத்தை, கடைசியாக மிகுந்து போன ரா, ம என்ற எழுத்துக்கள் செய்த புண்ணியத்தை; இந்தப் 'போனஸ்' கட்டிக் கொண்டிருக்கிறது. இதை எழுதுவதற்குள் அதை மூன்று முறை படித்து விட்டேன். மனம் அலாதி இன்பம் அடைகிறது. விசித்திர நிம்மதி பெறுகிறது. இடைரென்று நூறு குதிரை சக்திகள் உடம்பினுள் ஓடுவது போன்று நிதர்சனம் தெரிகிறது. இவை சத்தியமான வார்த்தைகள்; நம்புங்கள்!

சென்னை-93 கே. ராஜகோபாலன்

'மூவரோ தேவரோ' கட்டுரை படித்ததும் கர்நூலுக்கே ஒரு நடை சென்று மூன்று நடமாடும் தெய்வங்களையும் ஒருசேரத் தரிசிப்பதைப் போன்ற உணர்வு தோன்றி மெய் சிலிர்க்க வைத்தது.

சென்னை-5 எஸ். ருக்மணி

பிழைக்கத் தெரிந்தவர் நீர் என்பதை மீண்டும் நிரூபித்து விட்டீரே! பின்னே என்ன? ஆண்டு மலரிலேயே பெரிய இடத்துப் பிள்ளையைப் படம் பிடித்து அட்டையில் போட்டுக் கட்டுரை எழுதி ஜஸ்வைத்து...ம்! புத்திசாலிதான் நீர்!

புதுக்கோட்டை-1 ஆர். வி. பிரசாத்

'புத்திசாலிப் பைத்தியங்கள்' படத்துக்கு உமக்கு ஓசிப் பாஸ் கிடைக்கவில்லையா? ஒரே தாக்காகத் தாக்கி யிருக்கிறீர்களே!

திருநெல்வேலி-1 எஸ். கணேசன்

நீண்ட நாட்களாகப் பலர் எழுதமாட்டார்களா என்று எதிர்பார்த்த ஆட்டோ பற்றிய கட்டுரை மிகவும் அருமை. பயணிகளைத் துரும்பு போல் மதிப்பது, வெளியூர் பயணிகள் தலையில் மிளகாய் அரைப்பது, சண்டை பிடிப்பது போன்ற பல அநியாயங்களைப் படத்துடன் போட்டுக் காட்டியதற்கு நன்றி.

சென்னை-45 கே. எஸ். கணபதிசுப்பிரமணியம்

''நானும் டைப் பிஸ்ட் வனஜாவும் ஐந்துரூபாய் பந்தயம் கட்டியிருக்கோம். பந்தயத்தில் நான் வெற்றி பெற உங்கள் உதவி தேவை சார்.''

''ஓ.கே. என்ன பந்தயம்?''

''உங்களிடம் பத்து ரூபாய் கைமாத்து கேட்டால் தர மாட்டீர்கள், கஞ்சன் என்கிறாள் வனஜா!''





○ புருஷோத்தமன்

# மறுஜென்மம் எடுத்தோம்

நாங்கள் 52 பேர் அடங்கிய சாரணர் குழு ஜூலை 18ம் தேதி கொழும்புவில் நடைபெறும் சாரணர் மகாநாட்டில் கலந்து கொள்ள சென்னையிலிருந்து புறப்பட்டோம். கொழும்புக்கு 21ந் தேதி காலையில் போய்ச் சேர்ந்தோம். அன்று நாங்கள் சாரணர் முகாமில் கலந்து கொண்டோம். மறுநாள் கொழும்புவைச் சுற்றிப் பார்க்கச் சென்றோம். எல்லா இடங்களையும் பார்த்த பிறகு இலங்கைப் பார்லிமெண்டைப் பார்க்கச் சென்றோம். அங்கு நாங்கள் தமிழ் இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதால் அனுமதி அளிக்க மறுத்து விட்டனர்.

மறுநாள் நாங்கள் பேருந்து மூலம் கதிர்காமம், நுவரெலியா முதலிய இடங்களுக்குச் சென்று பிறகு 24ம் தேதி இரவு கண்டி சாரண தலைமையகத்தை அடைந்தோம். அங்குதான் ஒரு தமிழ் சகோதரர் எங்களிடம் வந்து சிங்கள மக்கள் தமிழர்களைப் பழி வாங்க ஆரம்பித்ததைச் சொல்லி எங்களையும் பாதுகாப்பான இடத்திற்குச் செல்லும்படி கூறினார். நாங்கள் பயந்தபடி சாரண தலைமையகத்தை அடைந்தோம். பிறகு அதனுள்ளேயே மூன்று நாட்கள் ஒளிந்திருந்தோம். 27ந் தேதி மதியம் ஒரு முஸ்லிம் நண்பர் வந்து "உங்களை இன்றிரவு ஒழித்துக் கட்டச் சிங்களவர்கள் திட்டமிட்டுள்ளனர். ஆகவே நீங்கள் இங்கிருந்து வேறு பாதுகாப்பான இடத்திற்குச் சென்று விடுங்கள்" என்று கூறினார். எங்களுக்கு என்ன செய்வது என்றே புரியவில்லை. சிங்கள சாரண ஆசிரியர் இந்திய தூதரகத்துடன் தொடர்பு கொண்டு ராணுவ பாதுகாப்புடன் எங்களை இந்திய கலாசார சபைக்கு அனுப்பி வைத்தார்.

அங்கே சுமார் 200 தமிழ் அகதிகள்தான் இருந்தனர். ஆனால் இரண்டு மூன்று மணி நேரத்திற்குள் அகதிகளின் எண்ணிக்கை ஆயிரத்தைத் தாண்டி விட்டது. அவர்களில் பெரும்பாலானோர் கை, கால்களை இழந்தும் கத்திவெட்டினால், உயிர் ஊசலாடும் நிலையிலும் வந்து சேர்ந்தனர். மறுநாள் காலை அங்கு 7000த்தை தாண்டி அகதிகள் வந்து சேர்ந்தனர். அவர்களில் பெரும்பாலானோர் லட்சாதிபதிகள். கோடீஸ்வரர்கள். தங்களது சொத்துக்களை எல்லாம் இழந்து, கட்டிய துணியோடு வந்திருந்தனர். அவர்களுக்குச் சாப்பிட உணவு இல்லை. மருத்துவ வசதி இல்லை. எங்களில் பலர் அவர்களுக்குச் சாப்பிடத் தட்டு டம்ளர் முதலியவற்றைக்

-இ.புருஷோத்தமன்



கொடுத்து உதவினோம். மீந்த அரிசி, பருப்பு, காய்கறிகள் முதலியவற்றையும் கொடுத்தோம்.

ஒரு தமிழ் இளைஞரை உயிர் ஊசலாடும் நிலையில் கொண்டு வந்து போட்டார்கள். உடம்பில் பிளேடினால் எப்படி யெல்லாம் கிழிக்க முடியுமோ அப்படி யெல்லாம் அவரது உடம்பில் வெட்டுக் காயம் பட்டிருந்தது.

ஜன்னல் வழியாகப் பார்த்தபோது எங்கு பார்த்தாலும் புகை தெரிந்தது. மக்கள் கதறியபடி ஓடிக் கொண்டிருந்தனர். துப்பாக்கிக் குண்டு வெடிக்கும் சத்தம் கேட்டுக் கொண்டே இருந்தது.

இந்திய ஹைகமிஷனர் சர்மா அவர்கள் வந்து, ''ராணுவம் கூப்பிட்டால் சென்று விடாதீர்கள். நான் அவர்களிடம் உங்களை ஒப்படைத்ததற்குச் சாட்சியாக எழுதி வாங்கிக்கொண்டிருக்கிறேன். ஏனெனில் இந்தியா அனுப்புவதாக ஆசை காட்டி அழைத்துச் சென்று கொன்று விடுவார்கள். நான் உங்களுக்கு விமானமும் ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறேன்'' என்று கூறினார்.

பிறகு 27ம் தேதி மதியம் ராணுவம் எங்களைப் பலத்த பாதுகாப்புடன் விமான நிலையத்துக்கு அழைத்துச் சென்றது. எங்களுடன் மற்றொரு இந்திய டூரிஸ்ட் குழுவினரும் வந்தனர். எங்களுக்குப் பாதுகாப்பாக மூன்று மிலிட்டரி வான்கள் வந்தன. கண்டியிலிருந்து கொழும்பு விமான நிலையத்திற்குச் செல்லும் வழியில் எல்லாம் பயங்கரமான காட்சிகளைக் கண்டோம். வீடுகளும் கடைகளும் எரிந்து கொண்டிருந்தன. வழியில் பஸ்கள், லாரிகள் கார்கள் எரிந்து கொண்டிருப்பதைப் பார்த்தோம்.

விமான நிலையத்தில் பாதுகாப்பாக இருந்த போதிலும் நடுக்கம் நீங்கவில்லை. அங்கும் சிங்கள வெறியர்கள் வெளியே உலாவிக் கொண்டிருந்தனர். எங்கள் உயிர் எங்களிடம் இல்லை. எப்போது இந்தியா போய்ச் சேருவோம் என்று இருந்தோம். மறுநாள் மதியம் பன்னிரண்டு மணிக்குக் கிளம்பி 12-45 மணிக்குத் தாயகம் வந்து சேர்ந்தோம். மறு ஜென்மம் எடுத்தது போலவே அனைவரும் கருதுகிறோம்.

பீஹார் மூஜாபூர் சென்டரல் ஜெயிலில் கடந்த 14 வருடங்களாகச் சிறையில் தவறுதலாக அடைத்து வைக்கப்பட்டிருந்து விடுதலையான திரு ருதல் ஷா என்பவருக்கு சுப்ரீம் கோர்ட் ரூபாய் 30,000 நஷ்ட ஈடாக அளிக்குமாறு பீஹார் மாநில அரசுக்கு உத்தரவிட்டிருக்கிறது. 14 வருடங்களுக்கு முன்பே மேற்கூறிய நபர் குற்றவாளி இல்லை என்று தீர்ப்பு அளிக்கப்பட்டு விட்ட போதிலும் அவரைச் சிறையில் 14 வருஷங்களாக வைத்திருந்தார்களாம்!

—மஞ்சுகதேவன்

# மௌனச் சிரிப்புகள்

அ.குமார்















## அருள்வாக்கு

தியானத்தில் ஒருமுகப்படுவதற்குப் பெரிய இடைஞ்சல் என்ன? இந்த மனசு ஓயாமல் ஆடிக் கொண்டிருப்பது தான். மனத்தினால்தான் எல்லாவிதமான கஷ்டங்களும் உண்டாகின்றன. மனத்தில் ஏற்படும் ஆசையே அத்தனை கஷ்டங்களுக்கும் காரணம். 'ஆசைப்படாதே' என்று இந்த மனசை இழுத்துப் பிடித்து நிற்கவைக்க முடியவில்லை.

நாம் 'ஒரு வஸ்துவை நினை' என்று அந்த மனசிடம் சொன்னால் அது ஏதோ சொற்ப காலம் அதை நினைப்பதுபோல இருந்து, வேறு எங்கோ பாய்ந்து விடுகிறது. தியானம், சாந்தி என்றெல்லாம் நான் உபந்நியாசத்தில் சொல்கிறபோது ஒரு க்ஷணம் உங்கள் மனம் அடங்கினாற் போல் தோன்றும், ஆனந்தமாய் இருக்கும். ஆனால் அடுத்த க்ஷணமே மனம் எங்கோ ஓடி, சாந்தி குலைந்து போகிறது.

'பேசாமல் இரு' என்று கட்டளை போட்டு வாயை மூடிக் கொண்டுவிட்டால் அது ஓரளவாவது பேசாதிருக்கிறது. பார்க்காதே என்று உத்தரவு போட்டுக் கண்ணை மூடிக் கொண்டுவிட்டால், கண் ஓரளவாவது பார்க்காமல் இருக்கிறது. ஆனால் இந்த மனத்திடம் மட்டும் 'நினைக்காமல் இரு' என்று எவ்வளவுதான் முட்டிக் கொண்டாலும் அது கேட்பதில்லை. நாம் 'நினை' என்றால் மனம் நினைக்க வேண்டும். 'நினைக்காதே' என்றால் நினைக்காமல் இருக்க வேண்டும். அப்போதுதான் நமக்கு மனம் ஸ்வாதீனமாயிற்று என்று அர்த்தம்.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசாரிய ஸ்வாமிகள்

---

# "அன்னை பவானிதான் காப்பாற்றினாள்"

திருப்பதி செல்லும் பஸ் பாதையில் திருவள்ளூர் அருகே அமைந்த சிற்றூர் அன்னை பவானியாம் பெரியபாளையத்தம்மன் கொலுவீற்றிருக்கும் தலம்.

ஆடி ஞாயிற்றுக்கிழமை அன்னையின் அருட் பிரசாதம் பெற, பெரியபாளையம் செல்கிறோம். கண்களில் கண்ணீர் ததும்ப, பக்திப் பிரவாகத்தின் பரவசத்துடன் ஈர உடையில் பலரும் வேப்பஞ்சேலை அணிந்து கூட்டம் கூட்டமாக வருகிறார்கள்.

அன்னை நூதன உருவுடன் வலது மேற் கையில் சக்கரமும், இடப்புறம் சங்கும் ஏந்தி, ஒரு கையில் வாளும், இடக் கையில் அருள் பாலிக்கும் அமுத கலசமும் கொண்டு தோற்றமளிக்கிறாள்.

தலைமை அறங்காவலர் திரு பி. வி. சம்பத் கூறுகிறார்: ''இந்தக் கோயில் சுமார் ஆயிரம் ஆண்டுகளாக இருக்கிறது.

1949-ல் நான் அறங்காவலராகப் பொறுப் பேற்றபோது சுயம்புவாக வளர்ந்து வரும் ஒரு தெய்வீகக் கல்லைப் பார்த்தேன். நாளாக நாளாக அது வளர்ந்து கொண்டே வந்தது; இன்னும் வளருகிறது. 1959-ல் அதைச் சுற்றிப் போட்ட ஒட்டியாணம் சிறிது காலத்தில் இறுக ஆரம்பித்தது. அப்போது தான் இதன் வளர்ச்சி எனக்குத் தெரிந்தது. இதைச் சுற்றிப் பெரிய பீடம் போட்டு முன்னால் அம்மன் முகத்தைச் செய்தோம்.

வருடத்தில் ஆடி மாதம்தான் முக்கிய மாதமாகும். பக்தர்கள் கூட்டம் பல லட்சங்களைத் தாண்டும். இங்கு வேப்பஞ் சேலை உடையில் ஆண், பெண் குளித்துவிட்டு வலம் வருவது தனிச் சிறப்பாகும்.

திருப்பதி போல இங்கும் இம்மாதத்தில் அதிக அளவில் மொட்டைப் பிரார்த்தனை நிறைவேற்றப் படுகிறது. இம்மாதத்தில் வாரத்தில் சனி இரவு அரை மணி நேரம் தான் கோயில் மூடப்பட்டிருக்கும், மற்ற எந் நேரமும் பக்தர்கள் அம்மனைத் தரிசிக்கிறார்கள்.

இந்தியாவின் பல பாகங்களிலிருந்து பல மொழி பேசுபவர்களும் பல மதத்தினரும் இங்கு வருகிறார்கள். ஹரிஜனங்கள் ஆலயப் பிரவேசம் இல்லாத அந்நாளிலேயே ஆடி மாதம் மூன்றாவது வாரத்தில் அவர்கள் அனுமதிக்கப்பட்டு, தரிசனம் அளித்த பெருமை இந்தக் கோயிலுக்கு உண்டு.

நீண்ட தூரம் கடல் பயணம் மேற்கொள்ளும் தங்களது மீனவ கணவர்களுக்காகப் பிரார்த்தனை செய்யும் மீனவ குலப் பெண்மணிகள் கோயிலுக்கு வந்து அம்மன் எதிரில் தங்கள் தாலிகளைக் கழற்றிவிட்டு, அங்குள்ள மஞ்சள் கயிற்றை அம்மன் சாட்சியாக வைத்துக் கட்டிக் கொள்கிறார்கள். இதன் மூலம் அம்மன் தங்கள் கணவன்மார்களைக் காப்பாற்றுவாள் என்று தீவிர பக்தி கொண்டுள்ளார்கள்.

அம்மனுக்கு அபிஷேகம் செய்யப்பட்ட புனித நீரை எந்த நோயாளியும் குளித்துவிட்டு, பக்தி சிரத்தையுடன் சாப்பிட்டால் தீராத வியாதிகளும் தீரும். இதற்கு நானே சாட்சி. ஆம்! மார்பு வலி வந்து துடிதுடித்த எனக்கு அன்னையின் அபிஷேக நீர் அளிக்கப்பட்டே உயிர்பிழைத்தேன். பெரிய இருதய நிபுணர்களால் கைவிடப்பட்ட என்னை அன்னை பவானிதான் காப்பாற்றினாள்!''

—''ரிக்கி''

வண்ணப்படம்: ரவீந்திரபல்லா

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431643)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

